

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித மனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்கு பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை : ரூ. 15,000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆணடும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)

நன்கொடை : ரூ. 5,000

இத்திட்டத்தின் கீழ் திருமலை-திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ. 2,000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.



வண்ணமருள்கொளணிமேகவண்ணா மாயவம்மானே!
எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே! இமையோரதிபதியே!
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்கும் திருவேங்கடத்தானே!
அண்ணலேயுன்னடிசேர அடியேற்காவாவென்னாயே.

[அருளே வடிவெடுத்த வண்ணமாய் அழகிய மேகம் போன்ற நிறத்தையுடையவனே! ஆச்சரிய குணங்களையுடைய தலைவனே! நெஞ்சுக்குள்ளே புகுந்து இனிக்கும் அமிழ்து போன்றவனே! தேவாதி தேவனே! தெளிந்த அழகிய அருவிகள் மணிகளையும், பொன்களையும், முத்துக்களையும் கொழிக்குமிடமான திருமலையிலே விளங்குபவனே! தலைவனே! உன் திருவடிகளிலே வந்து சேரும்படி அடியேன் விஷயத்திலே ஐயோ என்று இரங்கி அருளவேணும்.]

திருவாய்மொழி (6-10-3)

திருமலை வாருங்கள்! திருவருள் பெறுங்கள்!!

ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில், திருமலை.

# வருடாந்திர பிரம்மோத்ஸவம்



[22-9-98 முதல் 1-10-98 வரை]

நிகழ்ச்சி நிரல்

| நாள் | கிழமை | பகல் உத்ஸவங்கள் | இரவு உத்ஸவங்கள் |
|---|---|---|---|
| 22-09-98 | செவ்வாய |  | சேனாதிபதி உத்ஸவம் அங்குரார்ப்பணம் |
| 23-09-98 | புதன | வைரகவச ஆபரணத்துடன் தங்க திருச்சி உத்ஸவம், துவஜாரோஹணம் | பெரிய சேஷவாகனம் |
| 24-09-98 | வியாழன் | சிறிய சேஷவாகனம் | அம்ச வாகனம் |
| 25-09-98 | வெள்ளி | சிம்ம வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 26-09-98 | சனி | கல்ப விருக்ஷ வாகனம் | சர்வபூபால வாகனம் |
| 27-09-98 | ஞாயிறு | பல்லக்கில் மோகினி அவதாரம | கருட ஸேவை |
| 28-09-98 | திங்கள | அனுமன் வாகனம் மாலை: வஸந்தோத்ஸவம் | யானை வாகனம் |
| 29-09-98 | செவவாய் | சூர்யபிரபை வாகனம் | சந்திரபிரபை வாகனம் |
| 30-09-98 | புதன் | ரதோத்ஸவம் (திருத்தேர்) | குதிரை வாகனம் |
| 1-10-98 | வியாழன் | பல்லக்கு உத்ஸவம், தீர்த்தவாரி அவப்ருதோத்ஸவம், சக்ரஸ்நானம், | திருச்சியில்(மகாதோரண) துவ்ஜாவரோஹணம். |

இந்தப் பத்து நாட்கள் திருமலை கொலு மண்டபத்தில் பிரபல பண்டிதர்களால் அற நிலைச் சொற்பொழிவுகளும், புராணக்கதைகளும் நடத்தப்படும். அதோடு இசை நிகழ்ச்சிகளும், ஹரி கதைகளும், பஜனைகளும் நடைபெறும்.




*வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்*
*வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்*

மலர் 29 **ஆகஸ்ட் - 1998** இதழ் 3

| உள்ளுறை | பக்கம் |
|---|---|
| அரங்கனும் ஆளவந்தாரும் | 12 |
| கண்ணன் காட்டிய வழி | 16 |
| திருவல்லிக்கேணிக் கண்டேனே! | 19 |
| பகவத் கீதை | 21 |
| முருகன் பெருமை | 25 |
| விநாயகர் விரதங்கள் | 29 |
| வைணவத்தில் ஆசாரியரின் மேன்மை | 31 |
| வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும் | 36 |
| ஸ்ரீ ஆளவந்தார் | 39 |
| ஸ்ரீ கண்ணன் வரக்காணேனே! | 42 |
| ஸ்ரீ ராமானுஜர் | 45 |



**அட்டைப்பட விளக்கம்**

முன் அட்டை : ஸ்ரீ நவநீதகிருஷ்ணன் (உத்ஸவ மூர்த்தி) - திருமலை.
பின் அட்டை : ஸ்ரீ மகாலக்ஷ்மி, சித்திரம் - என்.வி. கணபதி.

சிறப்பாசிரியர் :
**திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.**
செயலாட்சித்தலைவர்,
தி.தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

❄ ❄ ❄

ஆசிரியர் :
**திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

❄ ❄ ❄

துணை ஆசிரியர் :
**திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,**

❄ ❄ ❄

அச்சிடுபவர் :
**திரு. எம். லக்ஷ்மண் ராவ்,**
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

❄ ❄ ❄

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294

❄ ❄ ❄

தனிப்பிரதி ரூ. 4/-
வருடச்சந்தா ரூ. 48/-

## உங்களுடன்....

'மனமது செம்மையானால் மந்திரம் ஜெபிக்க வேண்டாம்' என்கிறது பழமொழி. ஆனால் அதற்கு முன்பு மனித மனம் செம்மையாக வேண்டுமானால் இறை நாமத்தை - மந்திரத்தை பிரதி தினமும் பிரதி வேளையும் ஜெபித்தே ஆக வேண்டும். மனம் செம்மையுற்றால் மட்டும் போதுமா! மன உறுதி வேண்டும் மானிட உயிர்க்கு. மன அமைதி வேண்டும் மானிட இனத்திற்கு. மனச்சாட்சி ஒன்று இருத்தல் வேண்டும். மானிடப் பிறவிக்கு. எங்கே உள்ளது இம்மூன்றும்? உலக மேடையில் நடிக்க வந்துள்ள ஒவ்வொரு மானிடனும் தான் ஒரு நடிகன் என்பதை மறந்து மனத்தெளிவில்லாமல், மன உறுதியிழந்து, மன அமைதியற்று, மதி மயங்கி, பித்தேறி அலைகின்றான். அதோடு எங்கே நிம்மதி என்று தேடித் திரிகின்றான். நிம்மதி என்பது தேடினால் கிடைப்பதா! விலை கொடுத்து வாங் குவதா! ஓ மானிடனே! எங்கேயும் சென்று அலையத்தேவையில்லை. உன்னை நீ புரிந்துகொள். உன் மனதை நீயே அடக்கு? மனத் தெளிவோடு, மன உறுதியோடு இரு. எச்செயலையும் செய்யும் போது உன் மனச்சாட்சியோடு நடந்துகொள். அப்பொழுது உன்னைத்தேடி மன அமைதியும் மன சாந்தியும் உன்னருகில் வரும்.

"நற்செயல்களைச் செய்வதற்கு யாவரும் தயங்கத் தேவையில்லை, தீச்செயல் களைச் செய்வதற்கு கனவிலும் சிந்திக்க வேண்டியதில்லை. நல்லதையே நினை, நல்லதையே செய். பிறருக்கு உதவி புரிய மனக் கசப்புக் கொள்ளாதே. உல கோர்க்கு நன்மை பயக்குமெனில் மனத்தளர்ச்சியை விட்டு அச்செயலைச் செய். செய்யக்கூடாததை செய்ய மனக்கட்டுப்பாடுடன் இரு".

இதுபோன்ற நல் அறிவுரைகளை மண்ணில் மயங்கிக் கிடக்கும் மனிதர்க ளுக்கு வழங்குவதற்காக எடுக்கப்பட்டதே இறை அவதாரங்கள். மேலும் எம்பெருமான் விண்ணுட்டை விட்டு மண்ணுட்டிற்கு வந்ததின் நோக்கம் மானிட ஆன்மாக்களை வாரிப் பிடியாகப் பிடித்துச் செல்வதற்காகும். ஆயினும் அவற்றில் சிக்கியவர்கள் யுகங்கள்தோறும் மிகச்சிலரே. ஏன் அனைவருக்கும் அவ்வாய்ப்பு அமையவில்லை? வாய்ப்பு என்பது அனைவருக்கும் ஒன்றுதான். அவ்வாய்ப்பை பயன்படுத்தாது விட்டவர்கள்தான் அதிகம். எம்பெருமான் உலகோர்க்கெல்லாம் தாய். தாயானவள் எல்லாக் குழந்தைகளையும் சமமாகத்தான் பார்ப்பாள். ஆனால் அழாத குழந்தைக்கு பாலைத்தருவாளோ! அதுபோல எம்பெருமான் தன்னைப் பற்றாத ஆன்மாக்களைத் தான் பற்றுவானோ!

பரந்தாமன் பாரினில் அவதரிக்கும் பொழுதெல்லாம் தர்மத்தை - அறத்தை இம்மண்ணிலே நிலைநாட்டி அவற்றின் மேன்மைகளை மக்களுக்கு எடுத்துக் காட்டிச் சென்றுள்ளான். "தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே" என்று கீதையில் கூறியபடி பரமனின் கல்யாண குணங்களிலே தர்மத்தை நிலைநிறுத்துவது என்பது தலைசிறந்த ஒன்றாகும். எனவே அறத்தைக் கட்டிக்காப்பதற்காக தேவைப்பட்ட பொழுதெல்லாம் பகவான் அவதரிக்கின்றான். ஆயினும் அனைத்துக்காலங்களுக்கும் அவ் அவதாரம் ஒரேவிதமாக விளங்குவதில்லை. காலத்திற்கேற்றார்போலும், சூழ் நிலைக்கேற்றார்போலும் தான் ஆற்றவேண்டிய பெருஞ்செயலை ஒட்டி வெவ்வேறு வடிவம் தாங்கி அப்பகவான் அவதரிக்கின்றான்.

யுகங்கள் தோறும் பல அவதாரங்களை எடுத்த எம்பெருமான் த்ரேதாயுகத்தில் தலையெடுத்து ஆடிய அசுரர்களின் அட்டூழியங்களை அகற்றுவதற்கு மட்டுமே

அனைவருக்கும் புலப்படும் வகையிலே அரச வம்சத்திலே ஸ்ரீராமச்சந்திரனாக அவதரித்தமையை இராமாயண காப்பியம் உணர்த்துகின்றது.

அடுத்த யுகமான துவாபரயுகம் வந்தபிறகு சூழ்நிலைகள் தலைகீழாக மாறின. அதாவது அசுரர்கள் அசுரவடிவத்தை விட்டு மானிடவடிவம் தாங்கி அதர்மத்தை செய்து வந்தனர். எம்பெருமான் அவ் அசுரர்களை கிள்ளிக் களைவதற்காக அனைவரும் அயர்ந்து உறங்கும் நள்ளிரவில் அஷ்டமி அன்று 'ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து' வளர்ந்தான். முள்ளை முள்ளாலேயே எடுக்க வேண்டும் எனும் பழமொழிக்கேற்ப மாயையாய் வந்த அசுரர்களை தன்னுடைய மாயையால் முடித்தான் அம் மாமாயன். அசுர குணங்கொண்ட மானிடர்களை அழித்து பூ பாரத்தை குறைப்பதே கிருஷ்ணவதாரத்துடைய முதன்மை நோக்கமாகும். ஆகவே குருக்ஷேத்திரப் போரில் ஜீவாத்மாவான பார்த்தனுக்கு பரமாத்மாவான பரந்தாமன் திருத்தேர்தட்டிலே கீதா உபதேசம் செய்து, இச்ஜகத்திற்கே குருவாய் விளங்கி தன் அவதார நோக்கத்தை நிறைவேற்றினான்.

துவாபரயுகத்தைக் காட்டிலும் பன்மடங்கு இக்கலியுகத்திலே வாழும் மானிடனின் வாழ்க்கைநிலை மிகவும் மோசமானது. கொலை, கொள்ளை, ஏமாற்றம், தடுமாற்றம், தாழ்ச்சி, வீழ்ச்சி, பொய், பித்தலாட்டம் முதலானவைகள் நிரம்பி வழிந்து விட்ட காலம் இது. காமம், குரோதம், மோகம், லோபம், மதம், மாச்சர்யம் முதலான அறுவகை தன்மைகளும் மற்றும் அசுர குணங்களும் மானிடனின் இரத்தத்தின் இரத்தமாக கலந்துவிட்டன இக்கலிகாலத்தில். இவைகள் அவனை ஒவ்வொரு நாளும் ஆட்டிப்படைப்பதோடு, தர்ம, அதர்மங்களுக்கிடையே ஊசலாடிக் கொண்டிருக்கும் அவனுடைய இதயத்தை குருக்ஷேத்ர போர்க்களமாகவே மாற்றியமைக்கின்றன. இப்படி நாளும் மடிந்துக்கொண்டே இருக்கும் மானிடனை யார்காப்பது? இம் மனிதனை மனிதனாக மாற்றும் அவதாரம் எப்பொழுது வரும்? ஒருவேளை அப் பகவான் அவதாரம் எடுத்தாலும் சிறிதளவோ, பெரிதளவோ தீமைசெய்த பிரதி மானிடரையும் அழித்துவிட்டால் இங்கே நிற்பவர்கள் யார்? சிறந்த மானிடர்களாக மீளுபவர்கள் யார்? அப்படியெனில் நாம் என்ன செய்ய வேண்டும்? கீதை நாயகன் உபதேசித்தபடி "உத்தரேதாத்மனாத்மானம் நாத்மானமவ ஸாதயேத் । ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ ரிபுராத்மன: ॥" அதாவது ஆத்மாவைக் கொண்டு ஆத்மாவை உயர்த்திக் கொள்ள வேண்டும். ஆத்மாவை இழிவுறுத்தலாகாது. ஏனெனில் ஆத்மாவே ஆத்மாவிற்கு நண்பனும் பகைவனுமாதலால் மற்றொருவர் தன்னை உயர்த்துவார், பாதுகாப்பார் என்றில்லாமல் தன்னைத்தானே உயர்த்திக்கொள்ள, பாதுகாத்துக்கொள்ள ஒவ்வொரு மானிடனும் முற்பட வேண்டும்.

ஒவ்வொரு மானிடனும் மனது எனும் கடிவாள்த்தில் இந்திரியங்கள் எனும் குதிரைகளை பூட்டி, புத்தி எனும் சாரதியின் மூலம் உடல் எனும் தேரை வழிநடத்திச் செல்லுதல் வேண்டும். அப்பொழுதுதான் அவ் உடலில் வாசம் புரியும் ஆத்மா அடைய வேண்டிய இடத்தை அடைய, பெற வேண்டியப் பொருளைப்பெற ஏதுவாகும். துவாபரயுக முடிவிலே கலியுக மக்களுக்கென ஸ்ரீகிருஷ்ணபகவான் அறிவுறுத்திச் சென்றவைகளை மானிடராய்ப் பிறந்த நாம் ஏற்றுக்கொண்டு வீடுபேறு அடைவதற்கு வீறுநடை போடுவோம், அதற்கு கலியுக கண்ணனாம் காரிருள் வண்ணனாம் கலியுகவரதன் திருவேங்கடவனின் திருப்பாதக் கமலங்களைத் தஞ்சமெனப் பற்றுவோமாக.





# திருமலை திருப்பதி தேவஸ்தானம்

## நூல் வெளியீட்டுத்துறை

### தமிழ் மொழியில் வெளிவந்துள்ளவை

| வரிசை எண். | நூலின் பெயர் | விலை ரூ. |
|---|---|---|
| 1. | ஸர்வதேவதா பூஜாவிதானம் | 5-00 |
| 2. | ஆத்ம போதம் | 29-00 |
| 3. | மஹாபாரதக் கதைகள் | 7-00 |
| 4. | முக்கவிகண்ட காவியம் பகுதி-II | 20-00 |
| 5. | சித்திரத் திருப்பாவை | 15-00 |
| 6. | பகவத் ஸந்தேஷம் | 0-50 |
| 7. | திருவேங்கட ஸ்தல புராணம் | 13-00 |
| 8. | நியாய ஸித்தாஞ்சனம் | 9-00 |
| 9. | அன்னமய்யா சங்கீர்த்தன மஞ்சரி | 10-00 |
| 10. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 8-00 |
| 11. | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 10-00 |
| 12. | திருவேங்கடமலை வரலாற்றுமாலை | 30-00 |

### ஆங்கில மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அட்மினிஸ்ட்ரேஷன் ஆப் டெம்பிள்ஸ் | 25-00 |
| 2. | ஏ சினாப்ஸிஸ் ஆப் ஸ்ரீமத் பாகவதம் | 7-00 |
| 3. | பக்த புரந்தரதாஸா | 1-25 |
| 4. | ஹோலி ட்ரினிடி | 1-00 |
| 5. | பிரஸன்ன வெங்கடதாஸா | 1-50 |
| 6.** | சத்குரு தியாக பிரஹ்மம புஷ்பாஞ்சலி | 250-00 |
| 7.** | 108 வைஷ்ணவேட் திவ்ய தேஸம்ஸ் தொகுதி-III | 60-00 |
| 8.** | 108 வைஷ்ணவேட் திவ்ய தேஸம்ஸ் தொகுதி-IV | 60-00 |
| 9. | ஊர்தவமூலா | 12-00 |
| 10. | வ்யாஸராயலு | 0-75 |
| 11. | விசிஷ்டாத்துவைதா | 10-25 |
| 12. | விஷன் ஆப் ஆரியன் குலோரி | 1-50 |
| 13. | நம்மாழ்வார் | 3-00 |
| 14. | திருமழிசையாழ்வார் | 5-00 |
| 15. | பத்மாவதி அம்மவாரி டெம்பிள் | 2-00 |
| 16. | வைஷ்ணவ ஸம்ப்ரதாயம் இன் திருமலா | 1-25 |
| 17. | ஸ்ரீமத் பகவத் கீதா | 20-00 |
| 18. | க்ருஹ வைத்தியம் | 6-00 |
| 19. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-I | 37-00 |
| 20. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-II | 30-00 |
| 21. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-III | 10-00 |
| 22. | திருமலை-திருப்பதி-திருச்சானூர் | 8-00 |

### வட மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அலங்கார சங்க்ரஹா | 16-00 |
| 2. | ப்ரஹ்மம சூத்ர பாஷ்யம் | 30-00 |
| 3. | பாகவத மஹா புராணம் தொகுதி-I | 75-00 |
| 4. | கீதிகா நக்ஷத்ர மாலிகா | 2-50 |
| 5. | கோபால ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 5-00 |
| 6. | கடோபநிஷத் | 15-00 |
| 7. | கபிலேஸ்வரசுவாமி சுப்ரபாதம் | 0-10 |
| 8. | லலிதா ஸஹஸ்ரநாமம் | 28-00 |
| 9. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18-00 |
| 10. | சீதாராமஞ்சநேயம் | 50-00 |
| 11. | தத்வ ஸங்க்யானம் | 2-00 |
| 12. | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-I | 49-00 |
| 13.* | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-II (இரண்டு தொகுதியும் சேர்ந்து) | 45-00 |

குறிப்பு : தி.தி. தேவஸ்தானப் பதிப்பகத்தில் வெளிவந்துள்ள நூல்களை மொத்தமாகக் கொள்முதல் செய்பவர்களுக்கு கீழ்க்கண்டவாறு வாணிபக் கழிவு அளிக்கப்படும்.

1. ரூ. 100லிருந்து 500 வரை வாங்குவோருக்கு 15%
2. ரூ. 501லிருந்து 999 வரை வாங்குவோருக்கு 25%
3. ரூ. 1000லிருந்து அதற்குமேல் வாங்குவோருக்கு 30%

தயவு செய்து நீங்கள் விரும்பும் நூலின் விலை மற்றும் தபால் செலவோடு கேட்பு காசோலையாக "The P.R.O., Sales Wing of Publications, T.T. Devasthanams, Tirupati" எனும் பெயருக்கு எடுத்து இம்முகவரிக்கு அனுப்பவும். V.P.P. இல்லை. D.D. மட்டும் ஏற்றுக்கொள்ளப்படும்.

* அச்சில் ** கழிவு இல்லை.

# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீப்ரஸந்நாஞ்ஜநேய சுவாமி பூங்கா

அண்மையில் திருப்பதியிலிருந்து திருமலைக்கு செல்லும் நடைபாதையில் ஏழாவது மைலில் 30 அடி உயரமுள்ள ஸ்ரீ ப்ரஸந்நாஞ்ஜநேய சுவாமியை சுற்றியுள்ள பகுதியில் அழகிய பூங்கா ஒன்று கண்குளிரும் காட்சியாக அமைக்கப்பெற்றது. 1.25 இலட்ச ரூபாய் செலவில் பசும்புல் மைதானத்தில் அழகிய பலவண்ண பூச்செடிகளுடன், வாகனங்களை நிறுத்திவைக்கும் வசதிகளுடன் பூங்காவை ஏற்பாடு செய்துள்ளனர். ஸ்ரீ ப்ரஸந்நாஞ்ஜநேய சுவாமி பூங்காவை தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள் துவக்கி வைத்து, நடந்துவரும் பக்தர்களுக்கும் வாகனங்களில் வருவோருக்கும் ஓய்வெடுத்து கொள்ள வசதியாக ஏற்பாடு செய்த வனத்துறை அலுவலர் திரு. ராம்தாஸ் அவர்களை பாராட்டினார்.

இந்த நிகழ்ச்சியில் வனத்துறை அலுவலர் திரு. வெங்கட்ராமய்யா, திருமலை- திருப்பதியில் துணை வனத்துறை அலுவலர் திரு. ஸ்ரீநிவாஸ சாஸ்த்திரி, திரு. சுப்பாரெட்டி, வட்ட அலுவலர் திரு. நாராயண ரெட்டி, திரு. ஓபுல் ரெட்டி, தேவஸ்தான மக்கள் தொடர்பு அலுவலர் திரு. சுபாஷ் கௌடா அவர்கள் கலந்து கொண்டனர்.



## ஜேஷ்டாபிஷேகம்

திருமலையில் வீற்றிருக்கும் உற்சவ மூர்த்தியான ஸ்ரீதேவி, பூதேவி சமேதராய் விளங்கும் ஸ்ரீ மலையப்ப சுவாமிக்கு அணமையில் ஜேஷ்டாபிஷேக நிகழ்ச்சிகள் நடந்தது.

பல நூற்றுண்டுகளாக தினமும் நடக்கும் ஸ்நபன திருமஞ்சனத்தினால், உற்சவ மூர்த்திகளை தேய்ந்து போகாமல் காப்பாற்றுவதற்காக வைகானஸ ஆகம சாஸ்த்திர முறைப்படி ஏற்பாடு செய்யப்பட்ட அபிஷேகம் தான் இந்த ஜேஷ்டாபிஷேகம். எனவே வருடம் முழுவதும் தங்க கவசத்தால் காட்சி தரும் ஸ்ரீமலையப்ப சுவாமி அவர்களுக்கு கவசமின்றி திருமஞ்சனம் நடத்தி வைக்கப்பட்டது.

முதல்நாள் அன்று வைர கவசம் அணிவித்து ஆலயத்தில் ஊர்வலம் நடந்தது. இதை முன்னிட்டு மூலவராகிய திருமாலுக்கு விலை உயர்ந்த ஆபரணங்களினால் அலங்காரம் செய்யப்பட்டது. மூன்று நாட்கள் நடந்த இந்த விழாவில் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக், இணைச் செயலாட்சித் தலைவர் திரு. பாலசுப்ரமணியம், துணைச் செயலாட்சித்தலைவர் திரு. எம். ஸ்ரீநிவாசுலு மற்றும் பல உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர். இவ்விழாவில் சுமார் 64 பேர் கிருஹஸ்தர்கள் கலந்து கொண்டனர்.

## ஏழுமலையானுக்கு தங்கக் கட்டில்

திருமலை ஆனந்த நிலையத்தில் ஒவ்வொரு இரவிலும் ஏகாந்த சேவை என்ற திருப்பள்ளி சேவை நடைபெறும். இந்த சேவைக்காக தி.தி. தேவஸ்தானம் 6 இலட்

சம் ரூபாய் செலவில் தங்கக் கட்டில் ஒன்றை தயார் செய்து கொண்டிருக்கிறது.

அவ்வாறே சுவாமிக்கு சர்வ பூபாலம், சூரியப்ரபை, கல்ப விருக்ஷ வாகனங்கள் புதிதாக செய்து அவற்றை வருகின்ற ப்ரம்மோத்ஸவத்தில் பயன்படுத்த வேண்டுமென்று தி.தி. தேவஸ்தானம் முடிவு செய்துள்ளது. இத்துடன் சுவாமிக்கு அதிமுக்கியமாகிய தங்க கருட வாகனத்தையும் செய்து கொண்டிருக்கின்றனர்.

## திருவேங்கடவனுக்கு காதணிகள்

பூனாவைச் சார்ந்த ஓர் தொழிலதிபர் திருவேங்கடவனுக்கு புதிதாக செய்யப்பட்ட காதணிகளை மற்றும் அவற்றிற்கு துணையாக அலங்கரிக்கப்படும் ஆபரணங்களை உபயமளித்தார். இதன் மதிப்பு சுமார் 35 இலட்சம் ரூபாய் ஆகும். இவற்றை அண்மையில் தேவஸ்தான இணைச்செயலாட்சித் தலைவர் திரு. பாலசுப்ரமணியம், துணைச் செயலாட்சி தலைவர் திரு. எம். ஸ்ரீநிவாசுலு அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

## திருச்சானூரில் தெப்போத்ஸவம்

5-6-98 முதல் 9-6-98 வரை ஐந்து நாட்கள் திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி தாயாரின் தாமரைத் திருக்குளத்தில் தெப்போத்ஸவம் சிறப்பாக நடைபெற்றது.



முதல் நாள் 5-6-98 அன்று ருக்மினி சமேதரான ஸ்ரீகிருஷ்ணருக்கும், 6-6-98 அன்று ஸ்ரீதேவி, பூதேவி சமேதரான திரு. சுந்தரராஜ சுவாமிகளுக்கும், தெப்போத்ஸவம் நடைபெற்றது.



7-6-98 முதல் 9-6-98 வரை மூன்று நாட்கள் திரு. பத்மாவதி தாயாருக்கு மாலையில் தெப்போத்ஸவம் நடந்தது. இம் மூன்று நாட்களில் முதல்நாள் புஷ்ப பல்லக்கிலும், இரண்டாம் நாள் கஜ வாகனத்திலும், மூன்றும நாள் கருட வாகனத்திலும் தாயார திருவீதிவலமாக வநதார். பக்தர்களுக்கு காட்சி தந்தார.

இந்நிகழ்சசியை முன்னிட்டு திருக்கோயில் திருக்குளம் (புஷ்கரணி) மின் விளக்குகளால் அலங்காரம் செய்யப்பட்டது. இக்காட்சி கண்களுக்கு விருந்தாக இருநதது.



## ஸ்ரீகோவிந்தராஜசுவாமி பிரம்மோத்ஸவம்

பக்தர்களின் உள்ளத்தில் குடிகொண்டுள்ள திருப்பதி கோவிந்தராஜ சுவாமிக்கு 31-5-98 முதல் 9-6-98 வரை பத்து நாட்கள் பிரம்மோத்ஸவ விழா நடந்தது. 31-5-98 அன்று மாலை விழாவிற்கு துவக்கம் செய்யப்பட்டது. 1-6-98 அன்று இரவு 6-50 மணியளவில் பிரம்மோத்ஸவ ஆரம்ப அறிகுறியாக ஆலய தங்க த்வஜ ஸ்தம்பத்தில் கருடன் கொடி பறக்கவிடப்பட்டது. சாஸ்த்திர விதிப்படி, மங்கள வாத்தியங்களுடன் வேத மந்திரத்துடன், வைகானசாகம விதிப்படி சிறப்பாக நடந்த இந்நிகழ்ச்சியில் தி.தி. தேவஸ்தான இணைச் செயலாட்சித்தலைவர் திரு. ராமகிருஷ்ணு, துணைச்செயலாட்சித் தலைவர் திரு. லக்ஷ்மிபதி மற்றும உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர். பிறகு இரவு 8



மணியளவில், ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி பெரியசேஷ வாகனத்தில் ஸ்ரீதேவி பூதேவி சமேதராய் பக்தர்களுக்கு திருவீதிவலமாக காட்சி தந்தார்.

முறைப்படி 2-6-98 அன்று சிறிய சேஷ வாகனத்திலும், அன்று இரவு ஹம்ச வாகனத்திலும் 3-6-98 அன்று காலையில் சிம்ம வாகனத்திலும், இரவு முத்து பந்தலிலும், 4-6-98 அன்று காலை கற்ப விருக்ஷத்திலும், மாலை சர்வ பூபால வாகனத்திலும், 5-6-98 அன்று காலை பல்லக்கில் மோகினி அவதாரத்திலும், அன்று இரவு தங்க கருடனின் மேலும் 6-6-98 அன்று காலையில் அனுமன் மீதும், இரவு கஜவாகனத்தின் மீதும், 7-6-98 அன்று காலையில் சூரிய பிரபையிலும் , இரவு சந்திர பிரபையிலும் திருவீதிவலம் வந்தார்.

8-6-98 அன்று காலை 6-50 முதல் 9 மணி வரை ஸ்ரீதேவி பூதேவி சமேதராய் திருப்பதி நகர வீதிகளில் ரதோத்ஸவம் சிறப்பாக நடந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்டனர் அன்றிரவு குதிரை வாகனததில் சுவாமி திருவீதிவலமாக வந்தார்.

9-6-98 அன்று காலை 9-00 மணியளவில் நம்மாழ்வார தீர்த்தத்தில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமியின் சக்ர ஸ்நானம் நடநதது. அன்றிரவு 9-10 அளவில் கோயிலில் த்வஜாவரோஹணததுடன் விழா இனிதே முடிவுற்றது.

இந்த பத்து நாள் விழாவில் தர்மபிரசார பரிஷததினரால் புராண நிகழ்ச்சிகள், பஜனைகள், கோலாட்டம, ஹரிகதைகள், போன்ற அறநிலை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

இந்த விழாவிற்கு ஆலயம் முழுவதும், மின் அலங்காரங்கள் மலர் அலங்காரங்கள், பகதி சங்கீதஙகள, காவலதுறையினரால் விரிவான பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்படடன.

## ஸ்ரீராமானுஜ ஜெயந்தி திருவிழா

அண்மையில் தி.தி. தேவஸ்தானம் ஆழ்வார் திவ்ய ப்ரபந்த திட்டத்துறையினரால் ஸ்ரீராமானுஜ ஜெயந்தி திருவிழா மிகவும் சிறப்பாக திருப்பதி அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் கொண்டாடப்பட்டது. இவ விழா ஏழு நாட்கள் கொண்டாடப்பட்டன. முதல் நாள் விழாவில் டாக்டர. பாபு வேணுகோபாலராவ் சென்னை, டாக்டர். மேடசானி மோகன் திருப்பதி, திரு. பாதல ராமய்யா மைசூர் அவர்கள் கலந்து கொண்டனர். இரண்டாம் நாள் விழாவில் திரு. ஜூலகண்டி பாலசுப்ரமண்யம திருப்பதி, டாக்டர் மா. வரதராஜன் திருப்பதி அவர்கள பங்கு கொண்டு உரை நிகழ்த்தினர். மூன்றும் நாள் ஸ்ரீமான் திரு. உ.வே.தி.அ. கிருஷ்ணமாசாரயா சுவாமி திருப்பதி அவர்கள் ராமாநுஜரின் கீதாபாஷ்யத்தை பற்றி உரை நிகழ்த்தினார். நான்காம் நாள் டாக்டர். செல்லா ராதாகிருஷ்ண சர்மா மதுரை, திரு. கோவெல சுப்ரசன்னச்சாரியலு வரங்கல் அவர்கள் உரையாற்றினர். ஐநதாம்நாள் திரு. பி.ஆர். ரங்கராஜன் திருப்பதி, திரு. எம். பிரபாகர் ராவ் திருப்பதி அவர்தளும், ஆறும் நாள் டாக்டர். ரகுநாத சர்மா அனந்தபூர், டாக்டர். கெ. சர்வோத்தம ராவ் திருப்பதி அவர்களும் உரை நிகழ்த்தினர். ஏழாம் நாள் விழாவிற்கு திரு. கொண்டமாச்சார்யுலு தலைமை விருந்தினராக பங்கு பெற்றார். சிறப்பு விருந்தினராக டாக்டர். கெ. சர்வோத்தமராவ் அவர்கள் இடம் பெற்றார். டாக்டர். மேடசானி மோகன் ஆழ்வார் திட்டத்துறை இயக்குனர் அவரகள் நனறி உரையோடு விழா இனிதே நிறைவுற்றது. ♣

## விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயிலகளில் மறறும் திருமலை ஸ்ரீவேஙகடேஸ்வரர் கோயிலில் நடைபெறும ஆர்ஜித ஸேவைகளுககாக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசியமயமாக்கபபட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பபட ‘டிமாண்ட் டிராப்ட்’ D.D. அல்லது ‘பேஆர்டர்’ (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். ‘செக்’ (Cheque)குகளை அனுபபுவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைககு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

செயலாட்சித் தலைவர்,
தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.

வாருங்கள்! காணுங்கள்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஆலய தரிசனம்





திருப்பதி மற்றும் அதனைச்சுற்றியுள்ள முக்கிய திருககோயிலகளை மிக எளிதில பக்தர்கள் தரிசிக்கும் வணணம் தி.தி. தேவஸ்தானம் ஆலய தரிசனததை அறிமுகப்படுத்தியுள்ளது. ஒவ்வொரு நாளும காலை 6 மணி, 10 ணி மற்றும மாலை 3 மணி ஆகிய நேரங்களில் திருப்பதி இரயில் நிலையத்திற்குப பின்புறம் உளள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சததிர வளாகத்திலிருந்து இதற்கென்றே சிறப்பு பேருந்துகள் புறப்படுகின்றன.

## காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீ பத்மாவதி தாயார் திருககோயில, திருச்சானூரர.
2) ஸ்ரீ கல்யாணவேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில், ஸ்ரீனிவாசமங்காபுரம.
3) ஸ்ரீ அகஸ்தீஸவரசுவாமி திருக்கோயில், தொண்டவாடா.
4) ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருக்கோயில், திருபபதி.
5) ஸ்ரீ ஹரேராம ஹரேகிருஷ்ண திருக்கோயில், திருப்பதி.
6) ஸ்ரீ கோதண்டராமசுவாமி திருக்கோயில், திருப்பதி.
7) ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி திருக்கோயில, திருப்பதி.
8) வட்டார விஞ்ஞான மையம், திருப்பதி.

## பேருந்து கட்டணம் :

| | | |
|---|---|---|
| பெரியோர் | : | ரூ. 20/- (நபர் ஒருவர்க்கு) |
| சிறுர் | : | ரூ. 10/- (நபர் ஒருவர்க்கு) |

[சிறப்பு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]

# அரங்கனும் ஆளவந்தாரும்

சிரோமணி. எஸ். சத்யமூர்த்தி - கல்யாணபுரம்.

முன்னுரை :

ஆசார்ய குல ச்ரேஷ்டரான ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் தான் இயற்றிய 'அதிகார ஸங்க்ரஹம்' என்னும் நூலில் எம்பெருமான் திருவடிகளைச் சேர்வதற்கு, அவன் எழுந்தருளியிருக்கும் சிங்காதனத்தில் ஒன்பது படிக்கட்டுகளாக ஒன்பது ஆசார்யர்களைக் கூறுகிறார்.

"என்னுயிர் தந்தளித்தவரைச்
சரணம் புக்கு
யானடைவே யவர்குருக்கள்
நிறைவணங்கி
பின்னருளால் பெரும்பூதூர்
வந்தவள்ளல்
பெரிய நம்பி ஆளவந்தார்
மணக்கால்நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த
உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன்
சேனை நாதன்
இன்னமுதத் திருமகளென்-
றிவர்களை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகளை
யடைகின்றேனே"
என்று.

வேதத்தின் உட்பொருளான திருவாய்மொழியை அருளிச்செய்த சடகோபன் நம் ஆசார்யனாகவும், ஆழ்வாராகவும், திகழ்கிறார்.

திருவாய்மொழியை நமக்குக் காண்பித்துக் கொடுத்தவர் நாதமுனிகள். அந்த ஆசார்ய பரம்பரையில் தோன்றி, ஸ்ரீமந் நாதமுனிகளின் திருப்பேரனாகவும் அவதரித்தவர். ஆளவந்தார் என்று போற்றப்பட்ட யாமுன முனிகள் தாதுவருஷம் ஆடிமாதம் உத்தராட நக்ஷத்திரத்தில் தோன்றியவர். ஸ்ரீபாஷ்யகாரர் என்னும் ஸ்ரீமத் ராமானுஜ முனிவரை இவ்வுலகம் உய்வதற்காக நமக்குக் காண்பித்துக் கொடுத்தவர்.



முனித்ரய ஸித்தாந்த ஸ்தாபனாசார்யர்களாக ஸ்ரீமந் நாதமுனியையும், ஸ்ரீமத்யாமுன முநியையும், ஸ்ரீமத் ராமாநுஜ முனியையும் (இம்மூன்று முனிவர்களையும்) இன்றளவும் நாம் கொண்டாடி வருகிறோம்.

## ஆளவந்தார் என்னும் யாமுன முனிவர்

இவரது திருத்தகப்பனாரின் திருநாமம் ஈஸ்வரமுனிகள். மணக்கால்நம்பி என்னும் ஆசார்யன், தம்முடைய ஆசார்யனான உய்யக்கொண்டாரின் நியமனப்படி ஆளவந்தாரை கச்சியப்பதியினின்றும் திருவரங்கம் அழைத்து வந்து, நம் பெருமாள் திருவடியைத் தொழச்செய்தார். ஸ்ரீஆளவந்தாரும் 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்கிறபடி ஸர்வ ஸங்க பரித்யாகம் செய்து திருவரங்கம் வாழ்ச்சி பெற, தர்சன நிர்வாஹம் செய்து வந்தார்.

ஆளவந்தாரின் அருளிச் செயல்கள்

1. ஆகம ப்ராமாண்யம், 2. புருஷ நிர்ணயம், 3. ("ஆத்ம ஸித்தி, ஈஸ்வர ஸித்தி, ஸம்வித ஸித்தி என்று சொல்லப்படுகிற) ஸித்தித்ரயம் 4. கீதார்த்த ஸங்கரஹம் 5. ஸ்தோத்ரரத்னம், 6. சதுஸ்லோகி என்பனவாம்.

## பெரிய பெருமாளுடன் ஸல்லாபம்

பெரிய பெருமாளுடன் ஆள வந்தாரின் ஸல்லாப அனுப வத்தை நாம் ருசிக்கும் முன் பாக லௌகீக த்ருஷ்டாந்தம் ஒன்றைக் காண்போமாக.

ஒரு உயர்நிலைப்பள்ளியின் தலைமையாசிரியர் ஒருவர். அவரிடம் படிக்கும் மாணவன் ஒருவன் படிப்பைத் தவிர மற்ற காரியங்களில் அதிகம் திறமை உள்ளவன். மூன்று வருஷமாக ஒரே வகுப்பில் தேர்ச்சியின்றி படித்து வருகிறான்.

மாணவன் எப்படியாவது இந்த வருஷம் தேர்ச்சி பெற்று, மேல்வகுப்புக்குச் செல்ல விரும் புகிறான். எனவே, ஆசிரிய ரின் மனைவியைத் தஞ்சமடைகி றான். ஸஹதர்மிணியும் ஸமயம் பார்த்து கணவரிடம் சிபாரிசு செய்கிறாள்.

மாணவனிடம் அன்பும் அநு தாபமுமுடைய ஆசிரியரும், மாணவனை அழைத்து பல விதமாக கேள்விகள் கேட்டு சோதனை செய்கிறார்.

எந்தவிதமாகப் பரீக்ஷித்தும், தான் படிக்க இயலாமைக்குப் பல காரணங்களைக் கூறி, கடைசியாக ஒரு சொல்லம்பை யும் வீசுகிறான். அதாவது மூன்று வருடங்களாகத் தேர்ச்சி பெற முடியாத என்னை இந்த ஆண்டும் தாங்கள் தேர்ச்சி பெறச் செய்யாவிடில் தங்களுக் குத்தான் கெட்ட பெயர் ஏற்ப டும். தாங்கள் ஒரு திறமையற்ற தலைமையாசிரியர் என்பதாக தங்கள் மேலதிகாரி தங்கள் மீது குற்றம் சுமத்த நேரலாம் என்றவு டன் இவனை மேல் வகுப்புக்கு மாற்ற ஏற்பாடு செய்கிறார். இப் போது நாம் ஆளவந்தாரின் ஸல்லாபத்தை அநுபவிப்போம்.

முதலில் 'சதுஸ்லோகி ' என் கிற நான்கு ஸ்தோத்ரங்கள் மூல மாக பெரிய பிராட்டியைச் சர ணாகதி பண்ணி, அதன்பிறகு நம் பெருமாளிடம் ப்ரபத்தி பண்ணி ஸல்லாபிக்கத் தொடங்குகிறார்.

நமோ நமோ வாங்மனஸாதி பூதயே
நமோ நமோ வாங் மனஸைக பூமயே
நமோ நமோऽநந்த மஹா விபூதயே
நமோ நமோऽநந்த தயைகஸிந்தவே

என்பதாக ஆளவந்தார் பெரிய பெருமாளை ஸ்தோத் ரம் பண்ண, பெரிய பெருமா ளும் என்னையடைந்து முகஸ் துதி பண்ணுகிற நீர் நாம் கீதை யில் உபதேசித்தபடி கர்மயோ காதிகளைக் கடைப்பிடித்தீரோ. என்கிறார்.

ஆளவந்தாரும், கர்மஞான யோகாதிகளுக்கு நான் தகுதி யற்றவன். தேவரீரது திருவடி களைச் சரணமடைகிறேன் என் கிறார்.

ந தர்ம நிஷ்டோஸ்மி நசாத்ம வேதீ
ந பக்திமான் த்வச்சரணர விந்தே
அகிஞ்ச நோனன்ய கதி: சரண்ய
த்வத் பாத மூலம் சரணம் ப்ரபத்யே

இதைக் கேட்ட பகவானும் "அபதோஷதைவ விகுணஸ்ய குண:" என்கிறபடி குற்றமற்றவ ராக இருக்கிறீரா என்று கேட்க லோகத்தில் நிந்திதமாக சொல் லப்பட்ட கர்மாக்களில் அடி யேன் ஆயிரம் தடவைக்கும் மேலாக அனுஷ்டிக்காதது எது வும் இல்லை. என்னையுமறியா மல் செய்யப்பட்ட புண்ய கார் யங்களால் தேவரீர் முன்னே நிற்கிறேன். நான் செய்த பாப கர்மாக்களின் பலனால் தேவ ரீரை நெருங்க முடியாத நிலை யில் இருக்கிறேன்.

"ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே
ஸஹஸ்ரசோ யந்த மயா வ்யதாயீ
ஸோஹம் விபாகாவஸரே முகுந்த
க்ரந்தாமி ஸம்ப்ரத்யகதி ஸ்தவாக்ரே"
என்கிறார்.

பகவானும், பாபங்களையே இதுநாள் வரைச் செய்து வந் தநீர் இத்தனை நாள் என் னிடம் பராமுகமாக இருந்து விட்டு இப்போது மட்டும் எம்மி டம் ஏன் வந்தீர் என்று கேட்க, ஆளவந்தார் பதில் கூறுகிறார் - இத்தனை நாளும் ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கியிருந்தேன். உம்முடைய ஸமீபம் அடைய முடியுமோ, முடியாதோ என்ற ஸம்சயம் எனக்கு ஏற்பட்டிருந் தது. இப்போது ஏற்பட்டுள்ள புண்யவசத்தால் நீரில் மூழ்கிய வனுக்குக் கப்பல் தென்படுவது போல உமது திருவடி அடை யப்பட்டது என்றார்

நிமஜ்ஜதோऽநந்த பவார்ணவாந்த:
சிராய மே கூலமிவாஸி லப்த:
த்வயாऽபி லப்தம் பகவந்நிதானீம்
அநுத்தமம் பாத்ரமிதம் தயாயா:

இதைச்செவியுற்ற பகவானும், மஹாபாபியான உம்மை ரக்ஷித் தால் இவ்வுலகில் அனைவ ரையும் காப்பாற்ற வேண்டிய நிர்ப்பந்தம் எனக்கு நேரிடும். இதில் குறைந்த பாபம் செய் தவர் அனைவரும் அடங்குவார் களே - உம்முடைய ரக்ஷணத் தால் எனக்கு என்ன லாபம் என்று கேட்க,

ஆளவந்தாரும் பகவானே! உமக்கு என்ன லாபம்! என்று என்னைக் கேட்க வேண்டுமா? பல ஜன்மங்களுக்குப் பிறகு இன்று உம்முடைய சம்பந் தம் அடியேனுக்குக் கிடைத்துள் ளது. தேவரீருடைய தயைக்குப் பாத்ரமான அடியேனுக்குச் சம மானவர் யார் இருக்கிறார்கள் என்று பதில் கூறவும்,

பகவான், ஆளவந்தாரே, என்னை ஏமாற்ற எண்ணுதீர். நான் இப்போது உம்மை ரக்ஷிக் காவிடில உமக்குத்தானே நஷ்டம். எனக்கு என்ன வந்தது என்று கூற,

ஆளவந்தாரும-

எம்பெருமானே, எத்தனையோ காலமாக துக்கங்களை அனுபவித்து வருகிற அடியேன் ஸகலவித துக்கங்களையும் ஸஹித்துக் கொள்ள வல்லவன். அடியேனுக்கு இது ஒரு பொருட்டல்ல. ஆனால், இதனால் தேவரீருக்குத்தான் கெட்ட பெயர் ஏற்படக்கூடும்.

அடியேன் உம்முடைய எதிரில் இருந்துகொண்டு சரணகதி பண்ணினால் ஏற்க மறுக்கிறீர். அதனால் உமக்கு "க்ருதக்ஞன்" என்கிற பெயர் பொருளற்றதாக போகக்கூடும். "க்ருதக்ஞன்" என்கிற உம்முடைய பெயருக்குக் களங்கம் ஏற்படும்.

அபூத பூர்வம் மம பாவிகிம் வா
ஸர்வம் ஸஹேமே ஸஹஜம்
ஹிது: கம்
கிம் து த்வதக்ரே சராணகதாநாம்
பராபவோ நாத நதே$^{S}$நு ரூப:
என்கிறுர்.

பகவானும், இப்படி நீர் என்னை வஞ்சகமாகப் பேசி ஏமாற்ற வேண்டாம். நாம் உம்மை நிரஸிக்கவே எண்ணு கிறேம். என்று கூற ஸ்வாமி ஆளவந்தாரும் ஒரு தாயானவள் கோபத்தில் தன் குழந்தையை அடித்துக் தள்ளினாலும், தன் தாயினிடத்தில் ஸ்தன்யபானம் செய்து ருசியறிந்த அந்த சிசு மறுபடி தன் தாயின் காலையே கட்டுகிறது. அதுபோல நீர் எம்மை நிரஸனம் செய்தாலும் திரும்பத்திரும்ப உமது திருவடிகளை சரணமடைவோம்.

"நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே
மஹேச ஹாதும் தவ பாத பங்கஜம்
ருஷா நிரஸ்தோபி சிசும் ஸ்தநந்தய:
நஜாது மாதுச்சர ணௌ ஜிஹாஸதி
என்று பதிலிறுத்து - மேலும்

வண்டு தேன் உறிஞ்சும் போது பூக்களில் வித்யாஸம் காண்பதில்லை. ஆனால் தாமரையைக் கண்டுவிட்டால் மற்ற பூக்களை அலக்ஷியப்படுத்துகிறது. அப்படியிருக்க, தேவரீரது திருவடித்தாமரைகளில் லயித்த ஆத்மாவை உடைய நான் வேறொன்றைக்காண விரும்புவேனா என்ன?

தவாம்ருதஸ்யந்தினி பாத பங்கஜே
நிவேசி தாத்மா கதமந்ய திச்சதி
ஸ்திதேரவிந்தே மகரந்த நிர்ப்பரே
மது வ்ரதம் நேக்ஷுரஸம் ஹி வீக்ஷதே
என்று பதில் கூறவும்-

அப்படியானால், நம் திருவடிகளின் மஹாத்மியத்தை உண்மையாகவே அறிந்து சொல்கிறீரா என்று பகவான் கேட்க

ஸ்வாமி ஆளவந்தாரும் பகவானின் திருவடிகளின் பெருமைகளை சாஸ்த்ரோக்த முறையில் விண்ணப்பம் செய்கிறுர்.

எம்பெருமானே, எப்பொழுதாவது, எந்த காரணத்தாலாவது எப்படியாவது ஒருவன் உமது திருவடியை நினைத்து ஒரு தடவை அஞ்ஜலி செய்வானேயானால், அந்த க்ஷணத்திலேயே அவன் செய்திருக்கும் பாபங்களனைத்தும் துளிகூட மீதமில்லாமல் நசித்துவிடுகின்றன. புண்ய காரியங்களனைத்தும் அவனை ரக்ஷிக்கின்றன.

உமது திருவடிகளின் அநுராகார்ணவத்தின் திவலையும் ஸம்ஸார ஸாகரமாகிற காட்டுத் தீயை அணைக்கவல்லது.

"த்வதங்க்ரி முத்திச்ய
கதா$^{S}$பி கேநசித்
யதா ததாவாபி ஸக்ருத்
க்ருதோஞ்ஜலி:
ததைவ முஷ்ணாத் யசுபாந்
யசேஷத:
சுபாநீ புஷ்ணாதி நஜாது ஹீயதே"
"உதீர்ண ஸம்ஸார தவாசு சுக்ஷணீம்
க்ஷணேந நிர்வாப்ய பராம்ச
நிர்வ்ருதிம்
ப்ரயச்சதி த்வச் சரணம்புஜ
த்வயாநு ராகாம்ருத ஸிந்து ஸீகர:"
என்று பதில் கூறவும், பகவாந்-

ஸ்வாமிந்-இந்த அஞ்ஜலி மாத்ரேண உமக்கு ஸம்ஸார பந்தம் நிவர்த்தமாகுமோ? பலனை விரும்பாது நீர் ஆசைகளற்றவராக இருக்காலாமே என்று இவரை சோதிக்க எண்ணி வினவ-

ஆளவந்தார் ஸ்வாமியும்,

உம்முடைய நல்ல தேஜஸுடன் கூடியதும், அஞ்ஜலி செய்த மாத்ரத்தில் அடியார்களின் குறைகளைக் களையக்கூடியதும், அடியேனுடைய செல்வமுமான தேவரீரது திருவடித் தாமரைகளை அடியேன் கண்ணுரக்கண்டு தன்யனாவது எப்போது?

"விலாஸ விக்ராந்த பராவரால்யம்
நமஸ்ய தார்தி க்ஷபணே க்ருதக்ஷணம்
தனம் மதீயம் தவபாத பங்கஜம்
கதாநு ஸாக்ஷாத் கரவாணி சக்ஷுஷா"
என்று ப்ரார்த்திக்கிறுர்.

ஸ்ரீமந் நாராயணனும் தனது திருவடித்தாமரைகளை ஸ்வாமி ஆளவந்தாரின் கண்களுக்கு இலக்காக்குகிறுர்.

ஆளவந்தார் ஸ்வாமியும் உபயவிபூதி ஸாம்ராஜ்ய சின்னங்களான சங்கம் சக்ரம், கதை, கட்கம், சார்ங்கம், கமலம் இவை

களாலே அலங்க்ருதமான தேவரீரது சரணகமலங்கள் அடியேன் சிரஸை என்றைக்கு அலங்கரிக்கப்போகின்றனவோ?

"சுதா புநச்சங்க ரதாங்க கல்பக
த்வஜார விந்தாங்குச
வஜ்ர லாஞ்சனம்
த்ரிவிக்ரம த்வச்சரணும் புஜத்வயம்
மதீய முர்த்தாந மலங் கரிஷ்யதி"

என்று கண்களில் நீர்மல்க ப்ரார்த்தித்து மேன்மேலும் பகவானோடு அர்ச்சா ஸமாதியில் ஸல்லாபித்திருக்கிறுர்.

## முடிவுரை :

"பருப்பதத்துக் கயல் பொரித்த
பாண்டியர்க் குலபதி போல்
திருப்பொலிந்த சேவடி என்
சென்னியின்மேல் பொறித்தாய்
மருப்பொசித்தாய் மல்லடர்த்தாய்
என்றென்றுன் வாசகமே
உருப்பொலிந்த நாவினேனை
எனக்குரித்தாக்கினையே"

என்பதாக ஸ்ரீவிஷ்ணுசித்தர் அருளிச்செய்தபடிக்கும்,

"ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதி
தைவீக து:கவிக்ன கந்தரஹித
ஸ்த்வம் த்வய மர்த்தாநு ஸந்தே
ந ஸஹ ஸதைவம் வக்தாயாவச்
சரீர பாதமத்ரைவ ஸ்ரீரங்கே
ஸுக மாஸ்வ"

என்பதாக திருவரங்கனின் திருவாணைப்படியும் திருவரங்கத்திலேயே தன் வாழ்நாளைக் கழிக்கத் தொடங்கினார்.



## கண்ணு!

எந்தன் மனமே பிருந்தா வனமே
கண்ணு நீ வருவாய் - உந்தன்
எழில்மிகு கோலம் காணும் நிலையை
என்றும் நீ தருவாய் -எ-

கையில் குழலும் காலில் சதங்கையும்
கொண்டே ஆடிடுவாய்-எந்தன்
கனவிலும் நனவிலும் எல்லாம் நீயே
என்மனம் நாடிடுவாய். -எ-

வேண்டிய அளவு வெண்ணை உனக்கு
வேண்டியே நான் தருவேன் - என்
வேண்டுதல் தீர நாயகன் உன்னை
நாடியே நான் வருவேன். -எ-

பார்த்தன் மகிழ்ந்திட சொல்லிய பாடம்
பாரினிலே வேதம் - இந்த
பாரினில் உந்தன் கீதையைப் போலே
இல்லை வேறொரு கீதம். -எ-

## திருமலையான்

மலைமேல் வாழும் மாதவனே - மக்கள்
மனதினில் இனிக்கும் தூயவனே
மலைகள் ஏழின் அதிபதியே-அன்பு
மலர்மகள் போற்றும் சுகபதியே. -மலை-

வைகறை நேரத்து பூபாளம் - தினம்
வாழ்த்திப் பாடிடும் சுக ராகம்
புள்ளினம் பாடும் புகழ்கேட்டு-இந்த
பூமி மயங்கும் அருள்கேட்டு. -மலை-

கைகளில் சங்குடன் சக்கரமும்-கொண்டு
கனிவுடன் காப்பது அற்புதமே
காலமும் நேரமும் நானே என்று-எமை
நாளும் அழைக்கும் பொற்பதமே -மலை-

மார்பினில் தேவியின் திருக்கோலம்-கண்டு
மகிழ்வுடன் பணிந்தால் பொற்காலம்
நாமம் சொல்லி பாடினின்றல்-என்றும்
நடப்பது எல்லாம் நலமாகும். -மலை-

கவிஞர் திரு. குமார் - மதுராந்தகம்.

# கண்ணன் காட்டிய வழி

திரு. டி.டி. செல்வம் - ஏகாம்பரகுப்பம்.

நமது நாடு புண்ணிய பூமி. கர்மபூமி என்று அழைக்கப்படுகின்றது. வேற்றுநாட்டினர்க்கும் நமக்கும் உள்ள வேற்றுமையை விளக்குவது நம் இதிகாசங்கள.

இறைவன் பல அவதாரங்கள் எடுத்திருக்கலாம். ஆனால் நமக்கு மிகவும் முக்கியமானது இராமாவதாரம் மற்றும் கிருஷ்ணுவதாரம். இராமன் இப்படித்தான் வாழவேண்டும் என்று வாழ்ந்து காட்டினான். கண்ணன் இப்படித்தான் வாழ வேண்டுமென்று வாழ வழிகாட்டினான். நாம் நம் இதிகாசங்களை சற்று சிந்தித்து நோக்கினால் அவற்றில் உள்ள ஆழமான கருத்துக்களைக் கொண்டு நாம் அதன்படி வாழலாம். "India will be moral leader of the whole world" என்ருர் அரவிந்தர். காரணம் இந்தியா, தர்மத்தின் பாதையை வகுத்துத்தந்ததுதான். நம் இதிகாசங்கள் மனிதனுக்கும் அவன் வாழ்விற்கும் இடையில் நல்லதோர் பாலம் அமைத்து தந்தது. மனிதனை நல்வழி படுத்தியது. நற்பண்பும், ஒழுக்கமும் நிறைந்தவன் இறைவனுக்கு சமமானவன் என்று கூறியது. கண்ணனின் அவதாரமும், அதன் நோக்கத்தையும் நாம் இக்கட்டுரையில் காண்போம்.



கண்ணன் பிறந்தது சிறைச்சாலை. வளர்ந்ததோ ஆயர் குலத்தில். அப்பாவிகளான இடையர்கள் மத்தியில் ஆனந்தமாக வாழ்ந்தான். தீமையை அழித்து நல்லவர்களுக்கு உதவி புரிந்தான். நித்திய சந்தோஷியாகவும், போதும் என்ற மனம் கொண்டவனாகவும், மக்களிடையே அவர்களின் உள்ளத்தில் பதிந்துவிட்டான்.

கண்ணன் ஓர் வேதாந்தி, யோகி, மெஞ்ஞானி, அரசியல் மேதை, நட்பின் இலக்கணம் என்று பலவாறு அவனை புகழ்ந்துகொண்டே செல்லலாம். அவன் நமக்களித்த பெருஞ் செல்வம் கீதை. கீதையின் வாயிலாக நமக்கு துணிவு, தன்னம்பிக்கை, அன்பு ஒன்று பட்ட மனநிலையை போதித்தான். அன்று அவன் உபதேசம் விஜயனுக்கு மட்டுமின்றி, நம் அனைவருக்கும் கூறியதுதான். அவன் நமக்கு கோழைத்தனத்தை உபதேசம் செய்யவில்லை. இறைவனைக்காண துறவறம் தேவையில்லை என்ருன்.

கண்ணன் தாய் தந்தையர்க்கு நல்ல மகனாக வாழ்ந்தவன். கம்சனிடத்திலிருந்து தன் பெற்ருேர்களை விடுவித்தவன். பரம ஏழை சுதாமனுக்கு வறுமையை அகற்றிய

வன். தான் உயர்ந்த நிலையில் போகபாக்கியங்களில் வாழ்ந்து கொண்டிருந்த போதிலும், அந் தஸ்தை பாராமல் அவனை அர வணைத்து வரவேற்பு தந்தவன்.

கண்ணன் இவ்வுலகம் சுழல் வது அன்பு என்ற அச்சானி யால்தான் ஆகையால் இவ் வையகம் உய்ய அனைவரின் உள்ளத்திலும் அன்பு மலர வேண்டும் என்று கூறியவன்.

நம் உள்ளத்தில் தோன் றிய அன்பு, உயர்ந்த எண் ணங்கள் பக்தியின் வடிவ மாக இறைவன்பால் மட்டுமே செலுத்துகின்றோம். ஆனால் யோக நிலை கொண்ட மனி தன் அனைத்துயிர்களிலும், சம நோக்குக் கொண்டு எல்லா உயிர்களிலும் தன்னையும், தன் னில் எல்லா உயிர்களையும் காண்கிறான்.

"சர்வ பூதஸ்த மாத்மானாம்
சர்வ பூதானி சாத்மனி
ஈக்ஷதே யோக யுத்தாத்மா
சர்வத்ர சமதர்சன:"

கீதை (6-29)

அனைத்துயிர்களில் ஆத்மா வையும் ஆத்மாவில் அனைத் துயிர்களையும், தரிசித்து பன் மையில் ஒருமையையும் ஒருமை யில் பன்மையையும் கண்டு சம நோக்கில் நாம் காணும் பேரின் பமே அன்பின் இலக்கணம் என் கிறார். உயிரினங்கள் அனைத் தையும் வெறுக்காமல் கருணை யுள்ளம் கொண்டு நட்போடு பழ குவது தான் மனித இயல்பு என்கிறார்.

"அத்வேஷ்டா சர்வ பூதானாம்
மைத்ர: கருன ஏவச"

கீதை (12-13)

அதுமட்டுமின்றி நம்மில் உள்ள அசுர குணங்களை விமர் சனம் செய்து, தூய்மையுடன் நல்லதை தரிசித்து எல்லோரிட மும் அன்பைச் செலுத்துவது தான் மனித இயல்பு என்கிறார்.

"சமஸ் ஸத்ரௌ ச மித்ரேச ததா
மானவமானயோ:
சீதோஷ்ண சுக துக்கேஷு
சமஸ்வங்க விவர்ஜித:
துல்ய நிந்தாஸ்துதிர் மௌனி
சத்துஷ்டோ யேன கேனசித்
அநிகேத: ஸ்திர மதிர் பக்தி
மான்மே ப்ரியோ நர:"

கீதை (12-18, 19)

பகைவனிடமும் நண்பனிட மும், மானவமானங்களிலும், சீதோஷ்ணங்களிலும், சுக துக் கங்களிலும், சமநோக்குடைய வன், பற்றற்றவன், இகழ்ச்சியை யும் புகழ்ச்சியையும் சமமாக எண்ணுகின்றவன், மௌனத்தை கடைப்பிடிப்பவன், நிலையான இருப்பிடம் இல்லாத வன், நிலையான மனநிலைக் கொண்டவன், பக்தியுடையவன் எனக்கு மிகவும் பிடித்தமான வன் என்கிறார்.

மனதால் சிந்தித்து செயல்ப டுகின்றவன் மனிதன் என்கிறார்.

"மத்வா கர்மானி குர்வந்தி
இதி மானவ:"

அதாவது ஆவேசமில்லாத சிந்தனை மனிதனுக்கு தேவை என்பர். அந்நிலையை நாம் பெறவேண்டுமென்றால் அன்பை நாடுவது தவிர வேறொன்றும் தேவையில்லை. "மதாத்மா சர்வ பூதாத்மா" என்று அவன் நமக்க ளித்த கட்டளையை நாம் நன்கு உணர்ந்தால், அழிவுதரும் புரட் சிகள், நாசவேலைகளில் ஈடுபடா மல் பகை உணர்வில்லா மக் களாட்சியை ஏற்படுத்தி வருங் கால சந்ததியினர்க்கு அமை தியை அளிக்கலாம்.

"உத்சாஹம் சாஹசம் தைர்யம்
புத்திஸ்ஸக்தி: பராக்ரம:
ஷடதே யத்ர திஷ்டந்தி தத்ர
தேவோ உபிதிஷ்டதி"

உற்சாகம், சாகசம், தைரியம், அறிவு, சக்தி, வீரம், எங்கு குடி கொண்டுள்ளதோ அங்கு இறை வன் குடிக்கொண்டுள்ளான் என் பது பெரியோர்களின் வாக்கு.

இன்றைய இளைஞர்களில் உற்சாகம், தைரியம் இருப்பி னும் அவர்களிடத்தில் உள்ள நற்பண்புகளையும், தன்னம்பிக் கையையும் பயனுள்ள இலட் சியத்தின் பக்கம் திசைதிருப் பினோம் என்றால் அவர்களி டம் குடிக்கொண்டுள்ள மனிதத் தன்மை தெய்வநிலைபெற வழி வகுத்துத்தரும்.

தம்மில் உள்ள அறிவை நிலையாக வளப்படுத்தினால் தான் எதையும் நாம் சாதித்துக் காட்ட முடியும். வாழ்வின் மீது நல்லதொரு நோக்கம் ஏற்படும்.

இதைத்தான் கண்ணன் "வ்யவசாயாத்மிகா புத்தி ரேகேஹ குருநந்தன:" என் றான். இச்சமுதாயத்தை நல்வ ழிப்படுத்த நம்மை மகரிஷிகளின் சிந்தனையில் எச்சரித்தான்.

உலக அமைதியைக் காக்க சுயநலமில்லாமல் செயல்பட வேண்டுமென்று நமக்கு ஆணையிடுகிறான். எந்தவேலை யானாலும் அதனுடன் ஒன்றி ணைந்து பலன் எதிர்பாரா மல் செயல்பட வேண்டுமென் கின்றான். பயன் எதிர்பா ராமல் கடமையை செய்தால் அமைதி கிடைக்கின்றது என் கிறான். ஆகையால் நிஷ்காம கர்மத்தை போதனை செய்தான்.

"யோகஸ்த: குருகர்மானி சங்கம்
த்வக்தா தனஞ்சயா

சித்தய சித்யோ: நமோ பூத்வா
சமத்வம் யோக உச்யதே"
கீதை (2-48)

யோக நிலையிலியிருந்து, பற்று துறந்து காரியம பல னளித்தாலும், அளிக்கவில்லை யென்றாலும் கவலையில்லாமல தன் கடமையை செய்கின்ற தன்மையையே யோகம் எனப் படும். பலன் எதிர்பாராமல் யோக நிலையை பெறவேண் டுமெனறு இறைவன் நமக்கு ஆணையிடுகின்றான். உன் மனதை இறைவனிடத்தில் நிலைப்படுத்தி உன் அலுவல் களை நீ செய்து கொண்டிரு பலனை எதிர்ப்பார்க்காதே கட மையைச் செய் என்றான்.

நிஷ்காம கர்மம் செய்கின்றவ னுக்கு ஞானம், சித்த சுத்தியும கிடைக்கும். சித்த சுத்தியும் ஞானம் பெற்றவன் எளிதில் மோட்ச நிலைப்பெற வாய்பபு உண்டு. ஆகையால ஒவ்வொரு மனிதனும் கர்மயோக சாதனை புரிய வேண்டும் என்கிறார.

"ஆருருக்ஷோர்முனேர் யோகம்
கர்மகாரண முச்யதே
யோக ரூடஸ்ய தஸ்யைவ சம:
காரண முச்யதே"
கீதை (6-3)

யோகததை அடைய விருமபு கின்றவர்க்கு பொறுமை மிகவும் அவசியம என்கின்றார். எநத வேலையானாலும் யஜ்ஞபாவம் கொண்டு செய்ய வேண்டுமென கிறார். அவ்வாறு செய்கினற வனுக்கு ஆனந்தம், தூய்மை தெய்வநிலை கிடைக்கினறது.

விஞ்ஞானி ஆனாலும் சரி மெஞ்ஞானி ஆனாலும் சரி அவர்களிடம உள்ள அறிவாற றல், ஒளித்தன்மைககு விததான வன் அநத பரப்ரம்ஹமே என கின்றான்.

"பீஜமாம் சர்வ பூதானாம்
வித்தியார்த்தா சனாதனம்
புத்திர் புத்தி மதா மஸ்மி
தேஜஸ் தேஜஸ்வி நாமஹம்"
கீதை (7-10)

மனித வாழ்ககைக்கு பல வாறு நியதிகளை வகுத்து தந் தவன் கண்ணன். ஆகையால் தான் கண்ணனை குலசேகராழ் வார் முகுந்தமாலையில் இவ் வாறு வழிப்படடார்.

"நாஸ்தா தர்மே நவசுநிசயே
நைவ காமோப போகே
யத்யத்பவ்யம் பவது பகவான்
பூர்வ கர்மானுரூபம்
ஏதத்ப்ரார்தயம் மம பஹுமதம்
ஜன்ம ஜன்மாந்தரேஉபி
த்வத்பாதாம் போருஹ யுககதா
நிஸ்சலா பக்தி ரஸ்து"

அந்த கண்ணன சக்தி யத்தையே சுவாசித்து சத் தியத்தையே வாழ்க்கையா கக் கொண்டு எல்லோரிடமும் அன்பை செலுத்தும் மனப்பக் குவத்தை நமக்கு என்றென்றும் அளிப்பான் என்று அவன்தாள் பணிவோமாக.

"கிருஷ்ணார்ப்பணம்"



## ஸ்படிக லிங்கங்கள் எங்கு உள்ளன?

ஆதிசங்கரர் கையாலத்திலிருந்து ஐந்து ஸ்படிக லிங்கங்க ளைக் கொண்டு வந்தார். சிருங்கேரியில் போக லிங்கத்தையும், நேபாளத்தில் வரலிங்கத்தையும், கேதாரக்ஷேத்திரத்தில் முக்தி லிங்கத்தையும், காஞ்சிபுரத்தில் யோகலிங்கத்தையும் சிதம்பரத் தில் மோட்ச லிங்கத்தையும் நிறுவினார்கள்.

திருமதி. இரா. தெய்வ வீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

## ஐப்பசி-கார்த்திகையில் ஆழ்வார் - ஆசார்யர்கள் அவதார நன்னாட்கள்

| | | | |
|---|---|---|---|
| * 1. | மணவாளமாமுனிகள் | கேட்டை | 25-10-98 |
| 2. | பெரிய ஜீயர் | கேட்டை | 25-10-98 |
| * 3. | திருக்குறுகை பிரான் பிள்ளான் | பூராடம் | 27-10-98 |
| * 4. | சேனைமுதலியார் | பூராடம் | 27-10-98 |
| * 5. | பொய்கையாழ்வார் | திருவோணம் | 29-10-98 |
| * 6. | பிள்ளைலோகாச்சாரியார் | திருவோணம் | 29-10-98 |
| * 7. | பூதத்தாழ்வார் | அவிட்டம் | 30-10-98 |
| * 8. | பேயாழ்வார் | சதயம் | 30-10-98 |
| 9. | கோயில்கந்தாடை வாதூல தேசிகன் | உத்ரட்டாதி | 29-11-98 |
| * 10. | திருமங்கையாழ்வார் | கார்த்திகை | 2-12-98 |
| 11. | நம்பிள்ளை | கார்த்திகை | 2-12-98 |
| * 12. | திருப்பாணாழ்வார் | ரோஹிணி | 3-12-98 |

* திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் கொண்டாடும் நட்சத்திரங்கள்

# திருவல்லிக்கேணிக் கண்டேனே!

திரு. ஆர். கண்ணன் - சென்னை.

நூற்றெட்டு திவ்ய தேசங்களில் ஒன்று திருவல்லிக்கேணி. மாமயிலைத் திருவல்லிக்கேணி என்று திருமங்கையாழ்வாராலும், திருமழிசையாழ்வாராலும் பாடப்பெற்ற ஸ்தலம். பேயாழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட திவ்ய தேசம் இது.

"விற்பெருவிழவும் கஞ்சனும்
மல்லும் வேழமும் பாகனும் வீழ,
செற்றவன் தன்னைப் புரமெரிசெய்த
சிவனுறு துயர்களை தேவை
பற்றலர் வீயக் கோல் கையில்
கொண்டு பார்த்தன் தன் தேர்முன்
நின்ருனை
சிற்றவை பணியால் முடி
துறந்தானைத் திருவில்லிக்கேணிக்
கண்டேனே"

பெரிய திருமொழி (2-3-1)

எம்பெருமானின ஸௌலப்யத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்கும் திவ்ய தேசமான திருவல்லிக்கேணியில், எம்பெருமான் பார்த்தஸாரதியாக காட்சியளிக்கிருன். இரண்டே புஜங்கள் (கைகள்) ஒரு கையில் பாஞ்ச சன்யத்தைத் தாங்கி நிற்கிருன் எம்பெருமான் - வேறு எந்த ஆயுதமும் இல்லை.

எல்லா உலகத்தையும் தன ஸங்கல்பத்தினால் நடத்திச் செல்லும் எம்பெருமான் பார்த்தனுக்கு (அர்ஜுனனுக்கு) தேரோட்டியானான். எவ்வளவு ஸௌலப்யம்? அவன் ஸாரத்யம் செய்ததாலன்ருே பாண்டவர்களுக்கு வெற்றி ஏற்பட்டது. தேவாதிதேவன் என்ற பெயரைக் காட்டிலும் பார்த்தஸாரதி என்ற பெயரிலேயே அவனுக்கு ஏற்றம் அதிகம்.

பாண்டவ-கௌரவ யுத்தத்திலே ஆயுதம் எடுக்கமாட்டேன் என்று ப்ரதிஜ்ஞை செய்தான. (தன்னடியாரான பீஷ்மாசாரியாரின் ப்ரதிஜ்ஞையைக் காப்பாற்ற சக்ராயுதத்தை கையில் எடுத்தான். ஆனால் ப்ரயோகிக்க வேண்டிய நிலை வர



வில்லை). ஆயுதங்கள் கோஷ்டியில் சேர்ந்த பாஞ்ச சன்யத்தை மட்டும் கையிலேந்தி நிற்கிருன் பார்த்தஸாரதி. பாஞ்சன்யத்தின் நாதமே கௌரவர்களை நடுங்கச் செய்தது என்கிறது ஸ்ரீமத் பகவத்கீதை. அர்ச்சாவதாரத்திலே பாஞ்ச சன்யம் அவனுக்கு ஆபரணமாகவே காட்சியளிக்கிறது. எம்பெருமான இடது புஜம் திருவடியைக் காட்டியவண்ணம் உளளது. வலது புஜம் 'அபயத்தை' அளித்து பாஞ்ச சன்யத்தை ஏந்தியவண்ணம் ஸேவை ஸாதிக்கிறது. இந்தக் காட்சியைக் கண்டவுடன, கீதாசாரியன ஸ்ரீமத் பகவத் கீதையில் ஸாதித்தருளிய சரம ஸ்லோகம கண்முன்னே தோன்றுகிறது.

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாம்
ஏகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச: ॥

"எல்லா தர்மங்களையும் அநுஷ்டிக்க முடியாமலிருக்கும் நீ, என் ஒருவனையே சரணமாகப் பற்று ஸர்வசக்தனான நான் உன்னை எல்லா பாபங்களினின்றும் விடுவிப்பேன். அதன் பிறகு உனக்கு கவலையே வேண்டாம்" என்று நமக்கு நம்பிக்கை ஊட்டுகிறது. எம்பெருமான் கூற்று ஒருபோதும் வீண்போகாது.

சாரதியென்ருல் மீசை வேண்டும்போலும். ஸ்ரீபார்த்தஸாரதி அழகான மீசையுடன் காட்சி தருகிருன்! அவன் சாரதியாகவே மாறிவிட்டான் போலும்.

ஸ்ரீபார்த்தஸாரதி தனியாகவா காட்சி தருகிருன. இல்லை. தன் குடும்பத்துடன் காட்சி தருகிருன. ருக்மிணி பிராட்டி உடன் இருக்க தமையனார் பலராமன் தம்பி சாத்யகி, குமாரன் ப்ரத்யும்னன் மற்றும் பேரன் அநிருத்தனுடன் ஸேவை ஸாதித்தருளுகிருன.



இந்த திவ்ய தேசத்தில் திருவரங்கனும் பள்ளிகொண்டருளியுள்ளான். நாபீ கமலத்தில் ப்ரம்மா இருபார்சரங்களிலும் ஸ்ரீதேவி, பூதேவி பிராட்டிமார்கள் கைங்கர்யம் செய்து கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீவராஹகப்பெருமானும், ஸ்ரீநரஸிம்ம மூர்த்தியும் இங்கு ஸேவை ஸாதிப்பது அதிவிசேஷம்.

சக்ரவர்த்தித் திருமகனும், இங்கு குடும்பத்துடன ஸேவை ஸாதிக்கிறான். ஸீதாப்பிராட்டி, பரத, லக்ஷ்மண, சத்ருக்னன் மற்றும் சிறிய திருவடியுடன் அழகாகக் காட்சியளிக்கிறான் இராமசந்த்ரமூர்த்தி.

இங்கு கஜேந்த்ர வரதனுக்குத் தனி ஸந்நதியுண்டு. கருடாரூடனாக வரதன் மூலஸ்தானத்தில் ஸேவை ஸாதிப்பது இங்கு மட்டும்தான். நமக்கும் நித்யமும் கிடைப்பது கருட ஸேவைதான்.

ஸ்ரீநரஸிம்ஹன், யோகாநரஸிம்ஹனாக தனி ஸந்நதியில் ஸேவை ஸாதிக்கிறான். அழகிய சிங்கம் என்றும் தெள்ளிய சிங்கம் என்றும் கூறப்படும் இந்த ஸந்நதியில், உத்ஸவர் "வாருங்கள், வாருங்கள் என்னை சரணம் அடையுங்கள் எல்லா சுபீஷ்டங்களையும் அளிக்கிறேன்" என்று கூறும்படியான ஆஹ்வான முத்ரையுடன் காடசி தருகிறார்.

இங்கு தனிக்கோவில் நாச்சியாராக ஸ்ரீவேதவல்லித்தாயார் (ஸ்ரீரங்கநாயகி) ஸேவை ஸாதிக்கிறார். மன்னாதன் என்று போற்றப்படும் ஸ்ரீரங்கநாதனுக்கு பிராட்டியாக இருந்துகொண்டு நமக்கு அருள்புரிந்து வருகிறார். கோதை நாச்சியார் என்னும் ஸ்ரீஆண்டாளுக்கும் தனி ஸந்நதியுண்டு. திருவாடிப்பூரத் திருக்கல்யாணமும் உண்டு.

இங்கு கோயில்கொண்ட எம்பெருமான்கள் ஸ்ரீபார்த்தஸாரதி, ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகன், ஸ்ரீகஜேந்த்ர வரதன் மற்றும் ஸ்ரீதெள்ளியசிங்கம் அனைவரையும் ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்திருக்கிறார்கள். திவ்யதேசம் ஒன்றாயினும், கோயில்கொண்ட பல எம்பெருமான்களை ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்தது இங்குதான்.

எம்பெருமான்கள் தவிர, எல்லா ஆழ்வார்களும், ஆசார்யர்களும் ஸேவை ஸாதித்து அநுக்ரஹித்து வருகிறார்கள்.



(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினெட்டாம் அத்தியாயம்

## மோட்ச சந்நியாச யோகம்

உமைப்ரியன்

அர்ச்சுனன் கேட்டது :

"ஸன்யாஸஸ்ய மஹாபாஹோ
தத்வ மிச்சாமி வேதிதும் ।
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக்
கேசிநிஷூதன ॥ (1)

"ஹ்ருஷீகேசா! (இந்திரியங்களை அடக்கியவனே) மகாபாகுவே! (பரந்த தோள்களை உடையவனே) கேசி நிஷூதனா (கேசி என்ற அரக்கனை அழித்தவனே) சந்நியாசம், தியாகம் ஆகியவற்றின் தத்துவ இயல்புகளைத் தனித்தனியாக அறிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்."

[அறிவு என்பது ஒரு நிலையில் நின்று விடுவதல்ல. அறிவு வளர வளர அறிந்து கொள்ள வேண்டும் என்ற மன இயல்பு பெருகிக் கொண்டுதான் இருக்கும். அதுதான் அறிதலின் இயல்பு. முன்பு பதினேழு அத்தியாயங்களிலேயே சந்நியாசமு, தியாகம் போன்றவற்றின் விளக்கங்களை பகவான் கூறினாலும்· அர்ச்சுனன் அதனைக் கேட்டாலும், அவனுக்கு மேலும் மேலும் அவற்றை அறிந்து கொள்ள வேண்டும் என்ற அவா எழுகின்றது. அவனுடைய ஐயங்களை தீர்க்கவே - விளக்கவே இறைவனும் விரும்புகின்றுன். அதற்குரிய தகுதியினையும் பகவான் பெற்றுள்ளான். பரந்த தோள்கள் உடையவன் எனும் போது, இறைவன் உடலால் - வலிமையால் உயர்ந்தவனாகின்றுன். கேசி எனும் அரக்கனைக் கொன்றதால், தீமையை அழித்து தர்மத்தை நிலைநாட்டுவதற்குரிய மன உறுதியை இறைவன் பெற்றுள்ளதைக் காணலாம். இந்திரியங்களை அடக்கியவனே, மற்றவர்களுக்கு உபதேசம் செய்யும் தகுதி பெறுகின்றுன். ஆகையினால் தான் இறைவன் 'ஹ்ருஷீகேசா' என்று விளிக்கிப்படுகின்றுன். இங்கு அர்ச்சுனன் தன் ஐயத்தின் மூலமாக, ஸந்நியாசம், தியாகம் ஆகியவற்றின் பெருமையை தெரிவிக்க ஆசைப்படுகிறுன். இறைவனை அடைய இவ்விரண்டும் முக்கிய பங்கு வகிக்கின்றன. தன்னல ஆசையற்று உலக நன்மைக்காக கருமங்களை ஏற்றுத் தனக்காக எந்த கருமங்களையும் ஏற்காது வாழ்தலே ஸந்நியாசம் ஆகும். வினைப்பலன்களை எதிர்நோக்காது, வாழ்தலே தியாகம் அல்லது துறவு ஆகும்.]

பகவான் சொன்னது :

காம்யானாம் கர்மணும் ந்யாஸம்
ஸந்யாஸம் கவயோ விது:
ஸர்வகர்மபலத் யாகம் ப்ராஹு·
ஸத்யாகம் விசக்ஷணு: ॥ (2)

"காமிய கர்மங்களைத் துறப்பதே சந்நியாசம் என்று ஞானிகள் கூறுகின்றனர். எல்லா வினைப்பயன்களையும் துறப்பதே தியாகம் என்று தீர்க்க தரிசிகள் நினைக்கிறுர்கள்."

[தன்னல ஆசையின் காரணமாக ஒரு சாதாரண மனிதன் (காமிய கருமங்கள் எனப்படும்) பதவி, புகழ், செல்வம், ஆயுள் ஆகியவற்றிற்காகப் பலவினைகளை மேற்கொள்கிறுன். ஆனால் இவற்றிற்



காக வாழ்தலையோ, வினை ஆற்றுவதையோ மேற்கொள்ளாமல், தன் அன்றாட இன்றியமையாத தேவைகளின் காரணமாக அதாவது நடத்தல், பேசுதல், உண்ணுதல் போன்ற வினைகளை ஆற்றுபவனே சந்நியாசி என்பது அறிஞர்களின் கருத்தாகும். அடுத்து வருவது தியாகம், அல்லது துறவு என்பதாகும். ஒரு துறவியானவன் தன்னுடைய தினசரி தேவைகளுக்காகவும், சமுதாயத்திற்காகவும் வினைகளை மேற்கொள்ளும்போது, அதனால் ஏற்படும் பயன்கள் அவனைச் சிறிதும் பாதிப்பதில்லை. ஏனெனில அவன் தன் சுயநலத்திற்காக அவ்வினைகளை மேற்கொள்ளவில்லை. அதனால் அவனுக்கு எதனுடனும், எப்போதும் பிணைப்பு இருப்பதில்லை.]

**த்யாஜ்யம் தோஷவதித்யேகே**
**கர்ம ப்ராஹுர்மனீஷிண: ।**
**யக்ஞதானதப: கர்ம ந**
**த்யாஜ்யமிதி சாபரே ॥ (3)**

"வினைகள் யாவுமே குற்றங்குறை உடையவைகளே. ஆகவே அவற்றை முழுவதுமாக மேற்கொள்ளக் கூடாது என்று ஒரு சில அறிஞர்கள் கூறுகின்றனர். ஆனால், வேள்வி, தவம், தானம் ஆகிய வினைகளை மேற்கொள்ளாமல் இருத்தல் கூடாது என்று மற்ற சில அறிஞர்கள் பகர்கின்றனர்."

[இறைவன் மனிதனை இம் மண்ணில் தவழவிட்டது அவன் வாழ வேண்டும் என்பதற்காகத்தான். தன்னிடமிருந்து வந்த மனிதன் தன்னிடமே வந்து சேர வேண்டும் என்பது மட்டுமே இறைவனின் விருப்பமெனின் அவனை இம்மண்ணில் பிறக்கவைக்கத் தேவையே இல்லையே! பிறப்பின் நோக்கம் மனிதன் தன் நிலையிலிருந்து தன் வினையாற்றல்களின் மூலம் மகானாகத் திகழவேண்டும் என்பது தான். அப்போதுதான் இம் மண்ணில் பிற உயிரினங்கள் மேம்பட ஏதுவாகும். அப்போதுதான் முற்பிறவியின் காரணமாகப் பிறவி எடுத்து இன்னலுறும் மற்ற மனிதப்பிறவிகள் தங்களை மேம்படுத்திக்கொண்டு, பிறவியில்லாப் பெருவாழ்வை பெற்றிட முடியும். எந்த வினையை மேற்கொண்டாலும் அது நல்லது கெட்டது கொண்டே விளங்கும். சுவாசித்தல் என்பது மனிதனுக்குத் தேவையான ஒரு வினையாகும். அவன் சுவாசிக்கும் போது, எந்தவித உயிர்களுக்கும் அவனைப் பொறுத்தவரை தீங்கு விளைவிக்க வேண்டுமென்ற எண்ணம் இல்லை. ஆனால், அவ்வாறு அவன் சுவாசிக்கும்போது, பல கிருமிகள் அழிந்துவிடுகின்றன. இருட்டில் ஒளி ஏற்படுத்துவதற்காக தீபம் ஏற்றுகிறோம். ஒளி பிறக்கின்றது. அதே சமயம் பல பூச்சிகள் அத்தீபத்தைத் தேடி வந்து அதன் சூட்டினால் மடிகின்றன. ஆகவே தீங்கு, கெடுதி ஏற்படுகின்றது என்று ஒருவனால் வினை செய்யாமல் இருக்கமுடியாது. வினையாற்றல் என்பது வாழ்க்கையின் நியதி. ஆனால் அவ்வினைகளே தவம், யாகம், தானம் எனும் சமுதாய மேம்பாட்டிற்காக மேற்கொள்ளும்போது, அவை புனிதமாகின்றன. ஆகவே பொது நலவினைகளை ஆற்றுதலே மனிதனின் கடமையாகும்.]

**நிஸ்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே**
**பரதஸத்தம ।**
**த்யாகோ ஹி புருஷவ்யாக்ர**
**த்ரிவித: ஸம்ப்ர கீர்த்தித: ॥ (4)**

"பரதகுலத்தலைவனே! புருஷர்களில் புலி போன்றவனே! தியாகத்தைப்பற்றி நான் கொண்டுள்ள கருத்தை அறிவாயாக. தியாகமானது மூன்று வகையாகக் கூறப்பட்டுள்ளது."

[மனிதனது வாழ்க்கைக்கு பெருமையைத் தருவது தியாகமேயாகும். தாய் தன் பிரசவ வலியினை ஒரு தியாகமாகக் கொண்டு ஒரு உயிரைப் பெற்றுத் தருகின்றாள். தாயின் தியாகத்தால் மனிதன் பிறக்கின்றான். பூமி தனது சாரத்தை தியாகம் செய்வதால் செடி வளருகின்றது. மெழுகுவர்த்தி தன்னை உருக்கிக் கொள்ளும் தியாகத்தால் ஒளியைத் தருகின்றது. கனி தன்னை வளர்த்த மரத்தை தியாகம் செய்வதால் மனிதருக்கு உணவாகின்றது. ஆகவே மற்றொருவர் இன்பம் பெற, சுகம் காண ஒருவரது தியாகம் அவசியமாகின்றது. அத்தகைய தியாகம் மூன்று வகையாக உள்ளது.]

**யக்ஞதானதப: கர்ம ந த்யாஜ்யம்**
**கார்யமேவ தத் ।**
**யக்ஞோ தானம் தபஸ்சைவ**
**பாவனானி மனீஷிணாம் ॥ (5)**

"வேள்வி, தானம், தவம் ஆகிய வினைகள் விடமுடியாதவையாகும். அவைகள் மேற்கொள்ள வேண்டியனவாகும். (ஏனெனின்) அவை மூன்றும் அறிஞர்களுக்குத் தூய்மை எனும் பண்பினை வழங்கும் ஆற்றலுடையனவாகும்."

[வேள்வி என்பது இறைவனுக்காகச் செய்யப்படும் வினையாகும். தானம் சமுதாய உணர்வுடன் ஆற்றப்படும் வினையா

கும். தவம் என்பது தன்னுடைய ஆன்ம மேம்பாட்டிற்காக மேற்கொள்ளப்படும் வினையாகும். ஆகவே வேள்வி, தானம், தவம் ஆகியன இன்றியமையாத, ஒரு நிலையில் மனிதனால் மேற்கொள்ளப்படவேண்டிய வினைகளாகும். மனிதன் தன்னுடைய அன்றாடத் தேவைகளுக்காகவும், தன்னல பயன்களுக்காகவும் மேற்கொள்ளும் காமிய கர்மங்கள் என்பன தவிர்க்கமுடியாத வினை ஒழுக்கங்களாகும். அனுபவித்த பின்னர், ஏமாற்றங்களுக்குப் பின்னர், திகட்டிய பின்னர் மனிதனுக்குத் தானாகவே காமிய கர்மங்கள் மீது வெறுப்பு ஏற்பட்டு மேற்கூறிய வினைகளை ஆற்றிட விருப்பம் கொள்கிறான். அப்போதே அவன் தூய்மையாவதற்குரிய ஒரு பக்குவத்தைப் பெறுகின்றான். அந்த நிலையிலே அவன் அறிஞனாகின்றான்.]

ஏதான்யபி து கர்மாணி ஸங்கம்
த்யக்த்வா பலானிச ।
கர்த்தவ்யானீதி மே பார்த்த
நிஸ்சிதம் மதமுத்தமம் ॥ (6)

"பார்த்தா, மேற்கூறிய (வேள்வி, தானம், தவம்) வினைகளை பற்றற்று, பயன் எதிர்பார்க்காது மேற்கொள்ள வேண்டும். இதுவே எனது உறுதியான மேன்மையான உபதேசக் கொள்கையாகும்."

[வேள்வி, தானம், தவம் ஆகியவற்றை 'நான்', 'எனது' 'எனக்கு' என்ற அகந்தையுடன், பலன் எதிர்பார்த்து செய்யும் போது அவை காமிய கர்மங்களாகிவிடுகின்றன, அதாவது உலகாயுத ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளத்தான் பயன்படும். அவை மனிதனுக்கு உண்மையான மேன்மையைத் தராது. அவை முதலில் பலன் தந்து ஆசை காட்டி, புதைமண்ணில் வீழ்ந்த நிலையை இறுதிவரை தந்திடும், மனிதன் பிறர்க்காக எண்ணும்போதுதான் அவன் மனிதனாகின்றான்; புனிதமடைகின்றான். ஆகவே குழந்தையை வளர்க்கும் ஒரு தாயைப்போல், பாலைத்தரும் ஒரு பசுவைப் போல், ஒளியைததரும் ஒரு மெழுகுவர்த்தியைப் போல் மனிதன் மேற் கூறிய வினைகளை தியாக உணர்வுடன் தன வினைப் பலனைப் ஒரு தானமாகக் கருதி, அதனால் மேற்கொள்ளும் தன் வாழ்க்கையை ஒரு வேள்வியாக அமைத்துக் கொண்டால் அதுவே அவ்வினைகளுக்கும், அவற்றை செயல்படுத்தும் மனிதனுக்கும் புனிதமும், பெருமையும் ஆகும். பொது நலக் கருத்து இவ்வினைகளில் இருப்பதால், இறைவன் இவ் வினைமுயற்சியினை ஆற்றுதலே தனது சிறந்த அறிவுரையாக-கொள்கையாகக் கூறுகிறான்.]

நியதஸ்ய து ஸந்யாஸ:
கர்மணோ நோபவத்யதே ।
மோஹாத்தஸ்ய பரித்யாக
ஸ்தாமஸ: பரிகீர்த்தித: ॥ (7)

"அன்றாடம் செய்யவேண்டிய நித்ய கர்மங்களைச் செய்யாது விடுவது தவறாகும். அறிவில்லாமல் அவற்றை செய்யாது விடுவது தாமச துறவு என்று அழைக்கப்படும்."

[இந்த உடலும், வாழ்க்கையும் ஒன்றோடு ஒன்று பிணைந்திருப்பன. வாழ்வதற்காக இந்த உடல் சில தவிர்க்க முடியாத வினைகளை நாளும் மேற்கொண்டே இருக்கவேண்டும். இதுபோது மனிதன் நாளுக்குநாள் தூய்மையாகின்றான். அதன்பிறகு அவனை சமுதாய நிலையில சிந்திக்க வைக்கும். இதனை விடுத்து அந்த நித்ய கர்மங்களைச் செய்யாது விடுத்தால், மனிதன் சிந்திக்க சக்தியற்று, ஜடம் போல் வாழ்வை மேற்கொண்டு பல

உள்ள, உடல் கேடுகளுக்கே வழி வகுக்கும். ஆகவே இந்த நித்ய வினைகளைக் கண்டிப்பாக மேற்கொள்ள வேண்டும். இந்த நிலையில் அவன் செய்யும் வினையில் ஒரு பற்றும் பலன் மீது விருப்பமும் கொள்கிறான். இதுவே தாமச துறவு அல்லது தாமச தியாகம் என்று அழைக்கப்படுகிறது.]

து:கமித்யேவ யத்கர்ம காயக்லே-
சபயாத் த்யஜேத் ।
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம்
நைவ த்யாகபலம் லபேத் ॥ (8)

"உடல் துன்பத்திற்குப் பயந்து வினையாற்றுதலையே ஒரு துனபமெனக் கருதி வினை மேற்கொள்வதை கைவிடுபவன் ராஜஸ தியாகம் புரிகின்றான். அதனால் அவன் தியாகத்தின் பயனை அனுபவிப்பதே இல்லை."

[வாழ்க்கையில் வினையாற்றாமல் 'சும்மா' இருக்கமுடியாது. பிறப்பின் நோக்கம் வினையாற்றுதல். தன்னலத்திற்காக முதலில் செய்யப்படும் வினையாற்றுதல் போகப்போகப் பிறர் நலத்திற்காகச் செயல்படவேண்டும். 'வினைபுரிந்தால்தானே கெடுதி, துன்பம் வருகிறது. சும்மா இருந்தால் எல்லாவற்றையும் துறந்து மலையிலோ, குகையிலோ சும்மாவே உட்கார்ந்தாலே போதும். மற்றவர் நமது தேவையைப் பூர்த்தி

செய்வார்களே' என்று ஒருவன் நினைத்து விட்டால் அவனது பிறவி பயனற்றதொன்ருகிவிடும். பிறப்பின் நோக்கம் இல்லாது, பிறப்பினை மேன்மைப் படுத்தாது அவன் வாழ்க்கை பொருளற்றதாகிவிடும். இங்கு அர்ச்சுனன் "எங்கே போர் தொடங்கினால், போரில்தன் உற்ருர், உறவினர் இறக்கநேரிடுமே, நாம் பழிக்கு ஆளாகிவிடுவோமே" என்று அஞ்சி, துன்புற்று போரைத் தவிர்க்க முயலுகிருன். தர்மத்தைக் காப்பாற்ற உறவை இழக்க அவன் தயாராக இல்லாத போது, கிருஷ்ணன் இவ் அறவுரையை வழங்குகிருன். இங்கு அர்ச்சுனன் போரைத் தவிர்ப்பது ராஜச தியாக உணர்வின் வெளிப்பாடாகும். இது பயனற்ற, மோட்சத்தை நல்காத தியாகமாகும்.]

கார்யமித்யேவ யத்கர்ம நியதம்
க்ரியதே அர்ஜுன ।
ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ
ஸ த்யாக: ஸாத்விகோ மத: ॥ (9)

"அர்ச்சுனா! பற்றையும், பலனையும் விடுத்து, செய்யவேண்டிய எந்த நித்ய கர்மங்கள் செய்யப்படுகின்றனவோ, அவையே சாத்துவிக தியாகமாகக் கருதப்படுகின்றன."

[எல்லோரும் நாளும் கர்மங்கள் எனும் வினைகளை செய்து கொண்டே இருக்கிருர்கள். எல்லா வகைகளுக்கும் பலன் உண்டு. 'இன்ன பயன்' என்றும், செய்கின்றவன் 'நான்' என்ற உணர்வுடனும் நித்ய வினைகள் செய்யப்படுகின்றன. ஆனால் சாத்துவிக தியாகம் என்பது வினைகளை மேற்கொள்ளும் போது செய்பவன் 'நான்' என்ற உணர்வு இல்லாது, வினைப்பயன்களை மறந்து, எதிர்பார்க்காது, சேவை-கடமை என்ற உணர்வுடன் வினைகளை மேற்கொள்வது ஆகும். இந்த நிலையில்தான், வினையாற்றுபவனின் மனமும், இந்திரியங்களும் புனிதமடைகின்றன. மனிதன் நாளும் சுவாசிக்கின்ருன். ஆனால் 'நாம் சுவாசிக்கின்ரும், அதனால் நம் உயிர் இருக்கிறது" என்ற எண்ணம் சிறிதே இன்றி ஒரு கடமையாக தன்னையறியாது அதனைச் செய்கின்ருன். அந்த மனோபாவமே சாத்விக தியாகத்திற்கு தேவையாகும். ஆகவே சாத்துவிக தியாகியானவன் ஒருமுனைப்புடன், பற்றற்று, பயன் எதிர்பார்க்காது, செய்யும்போது பந்த, பாசம் எனும் உறவு நிலை கடந்து, ஒரு துறவி நிலையில் பணியை மேற்கொள்கிருன். இந்த மன உணர்வை அர்ச்சுனன் பெறவே கிருஷ்ணன் இவ்வாறு உபதேசிக்கின்ருன்.]

ந த்வேஷ்டயகுசலம் கர்ம
குசலே நானுஷஜ்ஜதே ।
த்யாகீ ஸத்வஸமா விஷ்டோ
மேதாவீ சின்னஸம்சய: ॥ (10)

"(ஆகவே) சத்துவ உணர்வுமிக்க உள்ளவனும், பேரறிஞனும், சந்தேகங்களை விலக்கியவனும் சிறந்த தியாகியாவான். அவன் துன்பம் ஏற்படுத்தும் வினைகளை வெறுக்கமாட்டான். இன்பம் தரும் வினைகளை மேற்கொள்ளமாட்டான்."

[சத்துவகுணம் கொண்ட தியாகியானவன் - துறவியானவன் பற்றற்று விளங்குவதால் அவன் ஆத்ம அறிவை பெற்றவனாகத் திகழ்கின்ருன். எப்போது அவன் 'நான்', 'எனது' 'பயன் இது' என்ற உணர்வின்றி, வினையாற்றுகின்ருனோ அவன் சமுதாயத்தில் நண்பனாக - வழிகாட்டியாக மாறிவிடுகின்ருன். வருத்தம் தரும், துன்பம் தரும், வெறுப்புக்கும், நகைப்புக்கும் இடம் தரும் வினைகளை அவன் மனமுவந்து செயற்படுத்துகிருன். அதே சமயத்து உடலைப் பேணிப்பாதுகாக்கவும், இந்திரியங்களுக்குத் துன்பம் தரும்படியாகவும் உள்ள வினைகளை அவன் ஏற்காது, அவற்றை வெறுக்கவும் செய்கின்ருன். அந்த நிலையில் அவன் இறை உண்மையை உணர்ந்த ஞானியாகின்ருன். அவன் மனதில் எந்த நிலையிலும் எதிலும், ஐயமோ, அச்சமோ ஏற்படுவதில்லை. எதிரில் இருக்கும் உருவங்களோ, எண்ணங்களோ ஒரு நிலைக் கண்ணுடியை எவ்வாறு சிறிதும் களங்கமோ, பாதிக்கவோ செய்வதில்லையோ அவ்வாறு இயற்கை நிகழ்ச்சிகள் சாத்துவிக தியாகியின் உள்ளத்தைச் சிறிதும் பாதிப்பதில்லை. இவ்வாறு அர்ச்சுனனை அறப்போரில் ஈடுபடுத்த பலவாறு உபதேசித்து, கண்ணன் நம்மை சிந்திக்க வைக்கிருன்.]

(தொடரும்)



# முருகன் பெருமை

திரு. ஏ. சுப்பிரமணியன்
முகலூர்.

## முருகனின் தொன்மை

நமது தமிழகத்தின் தெற்கே உள்ள கடல் பகுதியானது நினைவிற்கெட்டா நீண்டகாலத்திற்கு முன்பு நிலப்பகுதியாக இருந்தது. குமரிக்கண்டம் என்ற பெயர் கொண்ட பகுதியில் பஃறுளியாறும், பன்மலை அடுக்கமும் இருந்ததாக வரலாறு கூறுகிறது. அங்கேதான் முதன் முதலில் மக்கள் தோன்றினார்கள் என்பது வரலாற்று ஆசிரியர்களின் துணிபு. ஐவகைத்திணையாகப் இப்பூமியை வகுத்த தமிழன் குறிஞ்சித்திணைக்குரிய கடவுளாக முருகப் பெருமானை வணங்கத் தலைப்பட்டான். சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தொல்காப்பியம் குறிஞ்சிக் கிழவன் என்று முருகப்பெருமானைக் குறிப்பிடுகிறது. அருணகிரிப் பெருமானின் பாடலும் இதற்கு அரண் செய்கிறது. "முருகப் பெருமான் சிறு குழந்தை. உமையம்மையின் அமிர்தத்தை உண்டவன். சரவணப்பொய்கையின் மலர்த்தொட்டிலில் வைகுபவன். கார்த்திகைப் பெண்களின் பாலுக்காக ஏங்குபவன். கடலையும் மலையையும், சூரனையும் அழச்செய்தவன். விம்மி அழுது விளையாடும் இக்குழந்தையைக் குறிஞ்சிக் கிழவன் என்று இவ்வுலகம் கூறுகிறதே" இது என்ன வியப்பு, என்று பொருள்படும்படியாக பாடியிருக்கிறூர். இதோ அந்தப்பாடல்

"திருந்தப்பு வனங்கள் ஈன்ற பொற்
பாவை திருமுலைப்பால்
அருந்திச்சரவணப்பூந்தொட்டில்
ஏறி, அறுவர் கொங்கை
விரும்பிக்கடல் அழக்குன்றழச்
சூர்அழ விம்மியழும்
குருந்தைக்குறிஞ்சிக் கிழவன்
என்ரேதும் குவலயமே"



என்று கந்தரலங்காரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

## சொற்பொருள் நலங்கள்

முருகப்பெருமானுக்குப் பலவிதப் பெயர்கள் உண்டு. ஒவ்வொரு பெயரும் ஒவ்வொரு சிறப்புடன் திகழ்கின்றன. நக்கீரரும் தாமியியற்றிய திருமுருகாற்றுப் படையில் "அரும்பெறல் மரபின் பெரும் பெயர் முருகன்" என்று குறிப்பிட்டுள்ளார். முருகன் என்ற பெயருக்கு இளமையுள்ளவன், கட்டழகன், தெய்வநலமுள்ளவன் என்றும் முருகு என்ற சொல்லுக்கு அழகு, இளமை, மணம், தெய்வத்தன்மை என்றும் பொருள் கூறுவர். பாம்பன் சுவாமிகள்

முருகுலா நறிய முருகு
முருகு கோடி என முருகு
முருகு முசுலக முருகு
முருகு ருது மனமுருகு

என்று தனது "திருவலங்கல் திரட்டு" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இப்பாடலின பொருள் "திருவிழாவில் உலாவும் நல்ல இளமைப்பருவமுடைய முருகு எனும் பெயருடையவனே! என்னை ஏற்றுக் கொள் என்று வாசனையும், அழகும், மொய்க்கும் உலகத்துன்பத்தில் உழலும் பிறப்பானது என்னைப் பொருந்தாமல் இருக்க மனம் உருகுவாயாக" என்பது.

## அழகும் இளமையும்

போர்க்களத்தில் சூரபன்மன் முருகப்பெருமானைப் பார்க்கிறுன். முருகன் அழகில் ஈடுபட்டுத் தன்னை மறந்து முருகா ஆயிரம் கோடி காமர்கள் ஒன்று சேர்ந்தாலும் உன் காலழகுக்கு ஈடாகா என்ற பொருளில் பேசுகிறுன்.

ஆயிரம் கோடி காமர்
அழகெல்லாம் திரண்டொன்ருக
மேயின எனினும் செவ்வேள்
விமலரும் சரணந்தன்னில்
தூயநல்லெழிலுக் காற்ரு
தென்றிடின் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம்
உவமையார் வகுக்கவல்லார்

என்றும்,

இளமை பற்றிக் குறிப்பிடும்பொழுது,

கோலமா மஞ்ஞை தன்னிற்
குலவிய குமரன் தன்னைப்
பாலனென்றிருந்தேன் அந்நாள்
பரிசிவை உணர்ந்திலேன் யான்

மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகாரணமாய் நின்ற
மூர்த்தி இம்மூர்த்தியன்றே

என்று கச்சியப்ப சிவாசாரியார் கவினுறப்பாடியுள்ளார்.

அருணகிரியார் முருகப்பெருமானின் திருஉருவ நலனைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

நாளென்செயும் வினைதானென்
செயும் எனைநாடிவந்த
கோளென்செயும் கொடுங்கூற்றுஎன்
செயும் குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே!

என்பது.

## கந்தன்

கந்து என்றால் பற்றுக்கோடு, வலிமை என்று பொருள்களைத் தரும் கந்தன் என்றால் பகைவர்களை வற்றச் செய்பவன் என்றும் பொருள்தரும். கந்தரனுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்த புராணம், கந்த சஷ்டி என்ற நூல்கள் கந்தன் என்ற பெயர்ச் சிறப்பை வெளிப்படுத்துகின்றன. வேலை வணங்கும் போதுகூட "கந்தனே! என்ன நின்னைக் கைதொழுது ஏற்றுகின்றேன்" என்று கச்சியப்ப சிவாசாரியார் குறிப்பிடுகிறார்.

அந்தம் இல்லதோர் மூவிரு
வடிவம் ஒன்றாகிக்
கந்தன் என்று பேர் பெற்றனன்
கவுரிதன் குமரன்

என்று கச்சியப்பர பிறிதோரிடத்தில் குறிப்பிடுகிறார்.

## குமாரன்

முருகப்பெருமான் பெயர்களில் குமாரன் என்பதும் ஒரு சிறப்பானபெயர். "முருகன், குமாரன், குகன் என்று மொழிந்து உருகும் செயல் தந்து உணர்வு என்று அருள்வாய்" என்பது கந்தரனுபூதி. 'கு' என்பது அஞ்ஞானத்தைக் குறிக்கும். "மாரன்" என்றால் "அழிப்பவன்" என்று பொருள். மாந்தர்களின் உள்ளங்களில் உள்ள அஞ்ஞானத்தை அழிப்பவன். "நமோ குமாராய" என்பது முருகப்பெருமானுக்குரிய சடாக்ஷர மந்திரம். குமாரன் என்றால் பிரம்மச்சாரி என்றும பொருள் தரும். சுமார் பதினாறு ஆண்டு வாலிபனைக் குமாரன் என்றும் அழைப்பர்.

"பவன் பிரமச்சாரி பான்மொழிக்
கன்னியாகும்
தவம்தரும் ஞானத்தோர்க்கு இத்
தன்மைதான் தெரியுமன்றே"

என்பது சிவஞான சித்தி, "குமாரநம" என்று கூறினால் ஒருகால் அமராவதி சென்றரசாள்வார் என்பது திருப்போரூர் சந்நிதிமுறை.

## குகன்

அன்பர்களின் இதயமாகிய குகையில் தங்குபவன் "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்" என்று திருவள்ளுவரும் இதே கருத்தை வலியுறுத்தியுள்ளார்.

"வணங்கும் ஆருயிர்க்குகைதொறும்
வதிதலால் குகன் என்
றிணங்குவான் பெயர்க்கியையுமா
றிருப்பது போலாம்
நிணங்கொள் வேற்படை நிமலன்
நிரைமணிக்குகையின்
கணங்கொண் டோங்கிய
மலைக்கெலாம்
கடவுளாய்க்கலத்தல்

என்பது தணிகைப்புராணம். குகனே! குகனே! குகனே! என்போர்க்குச் சுகமே, சுகமே, சுகம் (பாம்பன் சுவாமிகள்)

## விசாகன்

வைகாசிமாத விசாக நட்சத்திரத்தில் முருகன் கோவில்களில் எல்லாம் திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன. விசாகம் ஞான வளர்ச்சிக்குரிய நட்சத்திரம். ஆறுநட்சத்திரங்களின் சேர்க்கையே விசாகநட்சத்திரம் முருகப் பெருமானும் ஆறு முகங்களைக் கொண்டவர். "வி" என்றால் பறவை அல்லது மயிலைக்குறிக்கும். "சாகன்" என்றால் சஞ்சரிப்பவன். மயிலை ஊர்தியாகக் கொண்டு சஞ்சரிப்பதால்தான் அடியார்களின் கூப்பிட்டகுரலுக்கு வேகமாக ஓடி வருகிறான். "ஆடும் பரிவேல்" என்று கந்தரனுபூதி முதற்பாடலில் மயில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## சுப்பிரமணியன்

சுப்ரமணியம் என்பது வேதத்தில் முக்கிய இடம் பெற்றுள்ளது. சிவபெருமானை வேதம் சதாசிவோம் என்று கூறுகிறது. "சுப்ரஹ்மண்யோம்" என்று வேதம் மூன்று முறை கூறித்துதிக்கிறது. சிவபெருமானும் சுப்பிரமண்யமும் வேறல்லர் என்பதைக் கந்தபுராணம் பின்வருமாறு கூறுகிறது.

"ஆதலின் நமது சக்தி
அறுமுகன் அவனும் நாமும்
பேதகம் அன்றால் நம்போற்
பிரிவிலன்யாண்டும் நின்றான்
ஏதமில் குழவி போல்வான்
யாவையும் உணர்ந்தான் சீரும்
போதமும் அழிவில் வீடும்
போற்றினர்க்கு அருளவல்லான்"

சிவன் வேறு சுப்பிரமணியன் வேறு அல்லர். சிவத்திடமிருந்து சுப்பிரமணியர் தோன்றி

னாலும் வேறுபாடின்றித் திகழ் பவர். துப்புரவு நாடுயிரே! சுப் பிரமண்யத்தின் மேல் எப்பிரமம் உள்ளது. இயம்பு (பாம்பன் சுவாமிகள்)

### சரவணபவன்

சிவபெருமானிடமிருந்து தோன்றிய தீப்பொறிகளை வாயுவும், அக்னியும் சுமந்து சென்று சரவணப்பொய்கையில் இட்டதால் சரவண பவன் என்ற பெயர் ஏற்பட்டது. சரம்-வ னம்- பவன்-சரவணபவன், சரம்-நாணற்புல், வனம்-பொய்கை, பவன்-தோன்றியவன், நாணற் புற்கள் நிறைந்த பொய்கையில் தோன்றியதால் சரவணபவன் என்ற பெயர் ஏற்பட்டது.

"மறைகளின் முடிவால் வாக்கால்
மனத்தினால் அளக்கொணமல்
நிறைவுடன் யாண்டுமாகி
நின்றிடும் நிமலமூர்த்தி
அறுமுக உருவாய்த்தோன்றி
அருளொடு சரவண த்தின்
வெறிகமழ்கமலப்போதில்
வீற்றிருந்தருளினானே!"

என்பது கந்தபுராணம்.

"சரவணபவ" என்பது சிறந்த மந்திரம். ஸ-மங்களம், ர-ஒளி, வ-சாத்துவீகம், ந-போர், பவன்-உதித்தவன் என்ற இயல்புக ளைத் தோற்றுவிக்கிறது.

### முருகப்பெருமானின் மாட்சிமைகள்

நமது முன்னோர்கள் நீலக் கடலையும் அங்கே தோன் றும் இளஞாயிறையும் உருவ கித்து நீலமயில்மீது ஆரோக ணிக்கும் செவ்வேளாக முருகப் பெருமானின் தோற்றத்தை உரு வாக்கினார்கள். முருகப்பெரு மானை அனுபவித்துப் பாடி னவர் நக்கீரர் அவர் தமது திருமுருகாற்றுப்படையில்,

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ்ஞாயிறு கடற்கண்டாங்கு
ஓஅற இமைக்கும் சேண்
விளங்குஅவிரொளி

என்று பேசுகிறார்.

ஞாயிற்றின் ஒளி புற இரு ளைப் போக்கும் முருகப்பெருமா னின் அருள் அகவிருளைப் போக்கும். கதிரவனின் தோற் றம் மக்களைக் கவர்வது போல முருகப்பெருமானின் உருவநலம் மக்களை ஆனந்தவெள்ளத்தில் திளைக்கச் செய்யும்.

## ஆறுமுகம் ஆனபொருள்

சிவபெருமானின் ஈசானம். சத் தியோஜாதம், வா மதேவம், அகோரம், தற்புருடம் என்ற ஐந்து முகங்களுடன் அதோ முகம் சேர ஆறுமுகங்களாயின. ஆறுதிசைகளையும் ஆறுமுகங் களின் ஒளி, பிரகாசிக்கச் செய் கின்றன.

அஞ்சுமுகம் தோன்றில்
ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சேல் என
வேல்தோன்றும் நெஞ்சில்
ஒருகால் நினைக்கின்
இருகாலும் தோன்றும்
முருகா என்றோதுவார் முன்

உள்ளத்தில் எப்பொழுதெல் லாம் பயம் தோன்றுகிறதோ அப்பொழுதெல்லாம் ஆறுமுகம் தோன்றி அச்சத்தைப் போக்கும். இதே கருத்தை,

அஞ்சுமுகம் தோன்றமல்
ஆறுமுகம் காட்ட வந்த
செஞ்சரணச் சேவடியைச்
சிந்தை வைப்பதெந்நாளோ

என்பர் தாயுமானவர்.

பெருமானின் ஆறு திருமுகங் களில் 1. ஒருமுகம் - உலகிற்கு ஒளியைத் தருகிறது. 2. ஒருமு கம் - அன்பர்களுககு வேண்டிய வரங்களைத் தருகிறது. 3. ஒரு முகம் - அந்தணர்கள் வேள்வி யைப் பாதுகாக்கிறது. 4. ஒரு முகம் - முனிவர்களுக்கு வேதப் பொருளை விளக்குகிறது. 5. ஒருமுகம் - அசுரரை அழித்து களவேள்வி புரிகிறது. 6. ஒருமு கம் - வள்ளியம்மையுடன் நகை யாடுகிறது.

ஆறுமுகங்களிலிருந்து வெளிப்படும் ஒளி வருமாறு.

1. ஞானப்பிரகாசம் 2. ஞானானந்தப் பிரகாசம், 3. சர் வஞான வியாபகப் பிரகாசம், 4. சுத்தஞான சாட்சிப் பிரகா சம், 5. சர்வ பரிசுத்த பிரம ஞாநானந்த அருட்பிரகாசம், 6. அநாதி நித்ய பிரமஞானானந்த சிவப்பிரகாசம்.

### பன்னிரண்டு கைகள்

சிவபெருமானின் கட்டளைப் படி உருத்திரர்கள் ஆயுதங்க ளாக மாறி முருகப்பெருமானின் பன்னிரண்டு கைகளிலும் தங் கியுள்ளார்கள்.

1. தோமரம், 2. துவசம், 3. வாள், 4. வச்சிராயுதம், 5. மிராசம் 6. கோதண்டம், 7. அம்பு, 8. அங்குசம், 9. கண்டை, 10 கமலம், 11. பரசு, 12. வேல்.

திருமுருகாற்றுப்படையில் பன்னிரண்டு ஆயுதங்களும் அவற்றின் தொழில்கள் பற்றி யும் கச்சியப்பமுனிவர் பின்வ ரும் செய்யுளில் குறிப்பிட்டுள் ளார்.

"உருத்திரப்பெயர் அண்ணலார்
பதினொருவரும் கொடி, கணை,
கண்டை
வருத்து தோமரம் வச்சிரம்
அங்குசம் வளைசம்வாள்
மழுத்தண்டம்

*பருத்தவார்சிலையாய், அருட்*
*சத்தியே சத்தியாய்ப் பகர்நின்கை*
*இருத்தல் காண்டலின் இறந்தன*
*பகைஎனஎண்ணினம்*
*இவண் எந்தாய்"*

## வேற்படை

வெல்வது வேல் எனப்படும். வேலுக்கு ஞானம், சக்தி, என்ற பெயர்கள் உண்டு. அஞ்ஞானத்தை அழித்து ஞானத்தை அளிப்பதுவேல்

*"சக்தி தன் வடிவே தன்னில்*
*தடையிலா ஞானமாகும்*

என்பது சிவஞான சித்தி. வேலும் மயிலும் துணை என்பதே ஒரு மந்திரம் வேலை வணங்குவதே எமக்கு வேலை என்பார் ஒருபெரியார். வேல் அசுரர்களை அழித்துத் தேவர்களைக் காத்தது. கடலை வற்றச் செய்தது. நக்கீரரைக் காப்பாற்றியது. கிரௌஞ்ச மலையைப் பிளந்தது. "எழுமலை பொடித்த கதிரிலை நெடுவேல்" என்பது கல்லாடம். வேல் என்ற சொல்லுக்கு அறிவு என்ற பொருளையும் தரும். அறிவுக்கு மூன்று இலக்கணம். அறிவு ஆழமானது, அகலமானது, கூர்மையானது. "ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" என்பது மணிவாசகம். சேவலும் மயிலும் அசுரசம்பந்தமுடையது. அதனால் "சேவலும் மயிலும் போற்றி திருக்கை வேல் போற்றி போற்றி" என்று வேலுக்கு இரண்டு முறை போற்றி கூறுகிறார். கந்தனே வேல், வேலே கந்தன். வேலினால் விடுவிக்கப்பட்ட வீரபாகு தேவர் "கந்தனே என்னநின்னைக் கைதொழுது ஏற்றுகின்றேன்" என்று வணங்குகிறார். வேலைத் தனியாக வைத்து வணங்கும் வேற்கோட்டம். இருந்ததாக சிலப்பதிகாரம் கூறுகிறது.

*சீர்கெழு செந்திலும் செங்கோடும்*
*வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்கை*
*வேல் அன்றே*
*பாரிரும் பௌவத்தின் உள்புக்குப்*
*பண்டொருநாள்*
*சூர்மாதடிந்த சுடரிலைய*
*வெள்வேலே (சிலப்பதிகாரம்)*

## கோழிக்கொடி

கோழிக்குச் சேவல் என்பது பெயர். கோழி நாத தத்துவம். நாதம் ஒலியைக் குறிக்கும். ஒலி இன்றேல் உலகம் இல்லை.

*"சேவலுங்கொடி யோன் காப்ப*
*ஏமவைகல் எய்தின்றால் உலகே!"*

என்பது குறுந்தொகைச் செய்யுள். இருளில் உறங்கும் ஆன்மாக்களை ஒலி கொடுத்து எழுப்புகிறது கொக்கரக்கோ என்று. கொக்கு-மா மரத்தை, அற-வெட்டிய, கோ-தலைவனாகிய முருகப்பெருமானே! என்பது பொருள்.

*"கோழிக்கொடியோன் அடிபணியாமல்*
*குவலயத்தே*
*வாழக்கருதும் மதியிலிகாள்"*

என்பர் அருணகிரியார்.

## மயில் ஊர்தி

ஆதியில் முருகப்பெருமான் மயில் வாகனத்தில் ஞானப் பழத்திற்காக, உலகை வலம் வந்தார். பின்னர் இந்திரன் மயிலாக வந்து முருகப்பெருமானுக்கு வாகனமாகினான். சூரபன்மன் போர் முடிந்ததும் இந்திரனாகிய மயிலுக்கு வீடுபேறு கிட்டியது. சூரன் மயிலாகி பெருமானுக்கு வாகனமாகினான். மயில் விந்து தத்துவம். மயில் ஓங்கார வடிவம். மயில் தோகை விரித்து ஆடும் போது "ஓம்" என்ற வடிவத்தைக் காட்டும்.

*"சாலவிளங்கும் விந்து*
*தத்துவம் எனும்*
*நடமாமயிலோய் காலேலோ"*

என்பது திருப்போரூர் சந்நிதி முறை. ஆடும் பரி வேல் அணிசேவல் என பாடும் பணியே பணியாய் அருள்வாய் என்று அனுபூதியில் முதற்பாடலில் அருணகிரியார் மயிலைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அருணகிரியார் "மயில் விருத்தம்" என்று தனிநூலே இயற்றியுள்ளார். மயிலின் வடிவம் மந்திர ரூபம் கொண்டது என்பதை,

*ஆனதனிமந்த்ர ரூபநிலை*
*கொண்டது*
*ஆடும் மயில் என்பதறியேனே!*

என்று அருணகிரியார் கூறுகிறார்.

## கந்தசஷ்டி விரதம்

ஒவ்வொரு முருக பக்தரும் ஆண்டுக்கு ஒருமுறை கடைப்பிடிக்க வேண்டிய விரதம் இது. ஐப்பசி மாத வளர்பிறையில் சஷ்டி விரதம் அனுஷ்டிக்க வேண்டும். சஷ்டி அன்று முருகப்பெருமான் சூரபன்மனை அழித்த நாள் ஆறுநாட்களும் பக்தர்கள் அவரவர் உடல் நிலைக்குத் தக்கவாறு நோன்பிருந்து கடைப்பிடிக்கவேண்டும். ஒவ்வொரு வாரமும் செவ்வாய்க் கிழமை அனுஷ்டிக்கப்படும் விரதம் வாரவிரதம். ஒவ்வொரு மாதமும் கார்த்திகை நட்சத்திரத்தில் அனுஷ்டிக்கப்படும் விரதம் மாத விரதம். ஒவ்வொரு ஆண்டும் சஷ்டியில் அனுஷ்டிக்கப்படும் விரதம் ஆண்டு விரதம்.

## முடிவுரை

ஒவ்வொரு ஆன்மீகப் பெருமக்களும் முருகப்பெருமானுக்குரிய காயத்ரி மந்திரமாகிய "ஓம் தத்புருஷாய வித்மஹே மஹாசேனாய தீமஹி தந்நோசண்முக பிரசோதயாத்" என்ற மந்திரத்தை உள்ளன்புடன் உச்சரித்து முருகப்பெருமானின் திருவருள் பெற்றுய்வோமாக. ✦

# விநாயகர் விரதங்கள்

திரு. க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

விநாயகர் என்றதும் சதுர்த்திதான் நம் நினைவுக்கு வரும். 'விநாயகர் சதுர்த்தி' என்ற வார்த்தைகள் விநாயகருக்கும் சதுர்த்திக்கும் உள்ள சம்பந்தத்தை நமக்கு விளக்குகிறது.

விநாயகரின் அருள்வேண்டி இருக்கும் விரதங்களில் சதுர்த்தி விரதம்தான் தலையாயது. ஆவணி மாதம் பூர்வ பட்சத்தில் வரும் சதுர்த்தியில் ஆரம்பிக்கும் இவ்விரதம் அடுத்தமாதம் சுக்கில பட்ச சதுர்த்தியில் முடிக்கப்படவேண்டும் என்று சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

பார்வதிதேவி, தாட்சாயிணியாக - தக்கனின் மகளாகப் பிறந்துவிட்டதற்காக வருந்தி, தக்கனின் செயல்களை வெறுத்து, யாகத்தில் விழுந்து உடம்பை அழித்துக் கொள்கிறாள். அவள் மீண்டும் பர்வதராசனின் மகளாகப்பிறந்து சிவபெருமானை மணந்து கொள்வதற்காக சதுர்த்தி விரதம் இருந்துதான் பலன் பெற்றாள் என்றால் அந்த விரதத்தின் மகிமை நமக்கு நன்கு விளங்கும்.

தாருகாசுரனின் அக்கிரமங்களைத் தாங்கமுடியாத தேவர்கள் சிவபெருமான்தான் இதற்கு நல்ல முடிவு காட்டமுடியும் என்று முடிவு செய்து அவரிடம் சென்று முறையிடுகிறார்கள். அச்சமயத்தில் சிவன் யோக நித்திரையில் இருந்தார். யோக நித்திரை கலைந்து எப்போது விழித்தெழுவார் என்று யாரும் சொல்ல முடியாது. ஆனால் தேவர்களின் கஷ்டங்கள் தாங்க முடியாதவை. உடனடியாகத் தீர்க்கப்படவேண்டிய ஒன்று. அதற்காக தேவர்கள் மன்மதனை அணுகினார்கள். முருகப்பெருமான் தோன



றினால்தான் அசுரன் அழிக்கப் படுவான். தேவர்களின் கஷ்டங்கள் தீரும். அதற்கு சிவன் யோக நித்திரையிலிருந்து எழ வேண்டும். அவர் உள்ளத்தில் விரகதாபம் ஏற்பட வேண்டும். அதற்குத்தான் காமனை அணுகினார்கள். காமன் தன் மலர் கணைகளால் ஈசனின் யோக நித்திரை கலைந்தது - குமரனும் தோன்றினான்.

ஆனால் ஈஸ்வரனின் கோபத் தீயில் மன்மதன் எரிந்து சாம்பலாகினான். ரதியின் வேண்டுகோளுக்கு இறங்கி ஈசன் 'மன்மதன் மற்றவர் கண்களுக்குத் தெரியாமல் அவள் கண்களுக்கு மட்டும் தெரிவான்' என்று கூறினார்.

மன்மதன் மீண்டும் எல்லோருக்கும் தெரியும்படியான உருவத்தை அடையவேண்டும் என்பதற்காக சதுர்த்தி விரதம் இருந்தான். விநாயகர் அவனுக்கு கோரிய வரத்தை அளிக்கிறார்.

அதனால்தான் மகாவிஷ்ணு கண்ணனாக அவதாரம் செய்த போது, ருக்மணிக்கும் கண்ணனுக்கும் மகனாக பிரத்யும்னன் என்ற பெயரில் மன்மதன் மீண்டும் தன் இழந்த உருவை மீண்டும் பெறுகிறான்.

சதுர்த்தி விரதத்தில் சங்கடஹர சதுர்த்தி மிகவும் விசேஷமானது. சந்திரன் உதயமாகும் நேரத்தில் இருக்கும் விரதம் அது.

சந்திரன் தனக்கு ஏற்பட்ட ஒரு சாபத்தை நீக்கிக் கொள்ள 22 வருடங்கள் சதுர்த்தி விரதம் இருந்து விநாயகப்பெருமான் மூலம் சாப விமோசனம் பெற்றான். அதனால்தான் சங்கடஹர சதுர்த்தி விரதத்தில் சந்திரனையும் வணங்குகிறார்கள்.

**விண்ணாமம் புகல்கின்ற திங்கள் தன்னில்**
**மிக்கமதி தனிலா நாம் பக்கமாகும்**
**இந்நாளில் யானுன்னை அருச்சித்திட்ட**
**இயற்கைபோல் யாருமினி ஈடிலா உன்**
**பொன்னாரும் மலரடியே புகலென் றுன்னிப்**
**பூசை புரிந் திடவுமவர் புண்கண்**

எல்லாம்
அந்நாளே அகற்றிற் யுலவாச்
செல்வம்
அளித்திடவும் வேண்டுமிஃ தருள்க

எனவே சதுர்த்தி விரதம், சங்கடஹர சதுர்த்தி விரதம் மற்றும் மார்கழி சஷ்டிவிரதம் இருந்து கணநாதனின் அருளுக்குப் பாத்திரராகுங்கள்.

மற்ற நேரங்களில் கணேசனை நினைந்து வழிபட்டால் பலன் ஏதுமில்லையா என்ற கேள்வி எழலாம்.

9334. ஒருமையால் உணருவோர்
உணர்வினுக் குணர்வதாம்
பெருமையான் எங்கணும் பிரிவரும்
பெற்றியான
அருமையான் எவரும்
அடிதொழும் தன்மையான்
இருமையாம் ஈசனே என்னநின்
றருளுவான்

என்று கந்தபுராணம் கூறுகிறது. சிவபெருமான் தேவர்களுக்குச் சொன்னது. அது நமக்கும் பொருந்தும் தானே.

விநாயகரை உள்ள ஒருமைப் பாட்டுடன் தம்மை அறிகின்றவாறு அறிவுக்கு அறிவாக விளங்கும் பெருமையுடையவர் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவர். பெறுவதற்கு அரியவர் பெறுவதற்கு அறியவராயினும் யாவரும் திருவடிகளை வணங்கும் எளிமையுடையவர். ஒருமையின் இருமையாகும் சிவபரம் பொருளே போல் இருமையின் ஒருமையால் விளங்கித் திருவருள் செய்பவர்.

எனவே உள்ளம் அவர் புகழைப்பாடி அவனை நம் மனத்தில் நிறுத்தினால் நமது விக்கினங்களை விரட்டி நம்மை நல்ல நிலையில் நிறுத்துவான் விக்கின விநாயகர். ❂

(சென்ற இதழின் தொடர்ச்சி)

# வைணவத்தில் ஆசாரியரின் மேன்மை

ஸ்ரீமான் தி.அ. ஸ்ரீநிவாசன் - காஞ்சிபுரம்.

வைணவத்வேஷியான ஒரு சோழராஜனின் உபத்திரவம் பொறுக்கமுடியாமல் ராமானுஜர் மேல்நாடு நோக்கிச் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் துணைகொண்டு அடையாளம் தெரியாமலிருக்கும் பொருட்டு காஷாயத்தைத் தவிர்த்து, வெள்ளை சாத்திக் கொண்டு பயணமானார். அப்படியும் ராஜதூதர்கள் பின்தொடரவே பிரிந்து செல்லலாயினர். ஒருபிரிவினர் ஒருமலையடிவாரத்தில் திருமலை நல்லான் சீடர்களாகிய வேடுவர்கள் நிலத்தை உழுது கொண்டிருந்ததைக் கண்டு அங்கு அடைக்கலம் புகுந்தனர். அவர்கள் ஸ்ரீரங்கத்திலிருந்து வருவதை அறிந்து வேடுவர்கள் 'ஸ்ரீரங்கத்தில் எம்பெருமானார்க்கு ஒரு குறைவுமில்லாமல் ஸௌக்கியமாய் எழுந்தருளியிருக்கிறாரா' என்று குசலம் விசாரித்தனர். அதற்கு ஸ்ரீவைஷ்ணவர் உடையவருக்கு நேர்ந்த கதியைக் கூறி, 'அவர் எங்கு சென்றார் என்று தெரியவில்லை' தேடி அலைகின்றோம் என்றார். இவ்வார்த்தையைக் கேட்டு வேடுவர்கள் வ்யாகுலப்பட்டு ஆறு நாள் பட்டினியே கிடக்க ஆறும் நாள் இரவு எம்பெருமானார் தம் குழாங்களுடன் மழையிலே நனைந்து குளிரிலே நடுங்கிக் கொண்டு வேடுவர்கள் இருக்கும் இடத்தை விளக்கொளியால் கண்டுகொண்டு வந்து சேர்ந்தார். இவர்களின் குரலைக் கேட்டு வேடுவர்கள் வெளியில்வந்து அவர்களை உள்ளே அழைத்துச் சென்று ஈரம் போக்கி, உலர்ந்த மாற்றுடை தந்து அவர்கள் ஸ்ரீரங்கத்திலிருந்து வருவதை அறிந்து, எம்பெருமானாரைப் பற்றி பதட்டத்துடன் விசாரிக்க, அவர்கள் 'உங்களுக்கு எம்பெருமானார் எப்படித் தெரியும்' என்று வியப்புடன் கேட்டனர். அதற்கு வேடுவர்கள் 'நாங்கள் திருமலை நல்லானின் அடியார்கள். அவர் நமக்கெல்லாம் பரமாசார்யர் எம்பெருமானாரே. ஆதலால் நீங்களும் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்றிருங்கள்' என்று எங்களுக்கு உபதேசம் செய்தருளியுள்ளார். 'நாங்களும் அதன்படியேயிருக்கின்றோம்' என்று பதில் கூறினர். அதைக்கேட்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானாரை அடையாளம் காட்டினர். உடனே எல்லோரும் ஸ்வாமியின் திருவடிகளைப் பற்றிக் கொண்டு ஸ்வாமியின் துர்கதியை நினைத்து வ்யாகுலப்பட்டு தேனும் தினையும் அமுது செய்வதற்குச் சமர்ப்பித்து உபசரித்தனர்.

மறுநாள் காலை நல்லானின் அடிமைகள் எம்பெருமானார் குழாங்களை ஆறுகாத தூரம் நடத்திச் சென்று ஒரு வேடர் தலைவனிடம் ஒப்படைத்தனர். அத்தலைவன் அருகில் இருக்கும் ஒரு ப்ராம்மணர் வீட்டில் அவர்களை விட்டு அவர்கள் அமுது செய்வதற்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்பினான். ஆகிலும் அவ்வீட்டு பெண்மணி வைணவர்கள் அமுது செய்வதற்கு தயங்குவதைக் கண்டு அவர்களை நோக்கி 'நீங்கள் தயங்கவேண்டாம். அடியேனும் எம்பெருமானார் சம்பந்தம் பெற்றவள் என்று கூறினாள். அவர்கள் 'எங்ஙனே!' என்று கேட்டருள, பின்வருமாறு கூறினாள். ஒருசமயம் மழை இல்லாமையால் நானும் என் கணவரும் ஸ்ரீரங்கவாஸம் மேற்கொண்டோம். அப்பொழுது எம்பெருமானார் பிக்ஷைக்கு எழுந்தருளும் போது ஒருநாள் அவர் திருவடி வணங்கி ஹிதோபதேசம் பெற்றேன். பிறகு சிலகாலம் கழித்து மழைபெய்து வளமானதை அறிந்து ஊருக்கு திரும்ப முடிவு செய்தோம். இடையில் உடையவர் அருளிச்செய்த நல்வார்த்தையை மறந்தேன். அத்ருஷ்டவசமாய் நாங்கள் திரும்புவதற்குமுன் எம்பெருமானார் பிக்ஷைக்கு நாங்கள் தங்கும் கிரகத்தின் முன் வருவது கண்டு ஸ்வாமியை அணுகி தண்டனிட்டு நின்று 'நாங்கள் எங்கள் நாட்டுக்கு திரும்புகின்றோம். தேவரீர், முன்பு அருளிய உபதேசத்தை மறந்தேன்.' என்ன உடையவர் மீளவும் த்வயத்தை நெஞ்சிலே நிலை நிற்கும்படி குருபரம்பரா பூர்வமாக உபதேசித்தருளினார். அத்துடன் த்ருப்தி அடையாமல் அடியேனுக்கு ஆத்ம ரக்ஷையாக ஏதேனுமொன்று தந்த

ருள வேணும் என்று ப்ரார்த்திக்க அந்த க்ஷணத்திலேயே தாம் சாத்தியிருந்த ஸ்ரீபாதுகைகளை ப்ரஸாதித்தருளினார். பின்னர் நாங்கள் இங்கு திரும்பிவிட்டோம்' என்று விளக்கம் அளித்தாள். இதைக் கேட்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானாரை அறிந்தீராகில் இங்கே எங்களிடையே இருக்கும் வரை அடையாளம் காட்டும்' என்று சொல்ல, அந்தப் பெண்மணியும் திருவிளக்கையேற்றிக் கொண்டு வந்து அடைவே பார்த்து எம்பெருமானார் திருவடிகளைக் கண்டு திகைத்து நின்று, 'இவை ஸ்வாமி திருவடிகளைப்போல இரா நின்றது. காஷாயமில்லாமையாலே, தெரிகிறதில்லை என்றுள். அவ்வளவிலே எம்பெருமானாருக்கு இங்கு விஜயம் செய்யும் காரணங்களைக் கேட்டு மிகவும் க்லேசமடைந்தாள். எம்பெருமானார் அப்பெண்மணியை நோக்கி தாம் செய்த உபதேசத்தை சொல்லச் சொல்லி அவள் அனுசந்தித்தவுடன் பரமத்ருப்தியடைந்தார். பிறகு அவளுக்கு அளித்த திருவடி நிலைகளை கொண்டு வரச்செய்து, ஸ்வாமி திருவடிகளுக்கு ஒத்திருப்பதைக் கண்டு மிகவும் உகந்து தளிகை செய்யச் சொல்லி அவளை அனுப்பிவிட்டனர். ஒரு ஸ்ரீவைஷ்ணவரை அவள் கண்காணிக்கும்படி நியமித்தார் எபெருமானார். இக்காரியம் அவள் மீது ஸந்தேகம் கொண்டு செய்தவையல்ல. அவளின் ஆசார்ய பக்தியை ப்ரகாசிப்பதற்காக. அப்பெண்மணியை கொங்கில் பிராட்டி என்றே அழைத்தருளினர். அப்பெண்மணி தளிகை முடித்துக்கொண்டு சுத்த வஸ்த்ரம் தரித்து, ப்ரஸாதத்தை எடுத்துக் கொண்டு உள்ளே சென்று கதவடைத்து ஸ்வாமியின் பாதுகைகளை திருவடி விளக்கி, அனுஸந்தானம் செய்து ப்ரஸாதத்தை அமுது செய்வித்து திரும்பியதைக் கண்டு எம்பெருமானார் மிக உகந்தார்.

அப்பெண்மணி ஸ்ரீபாதுகைகள் தவிர வேறு பகவதாராதனம் கண்டிலோம் என்று ஊர்ஜிதபடுத்தினாள். மேலும் அப்பெண்மணி தம் பர்த்தாவையும் உடையவரிடம் அடிபணியவைத்து எம்பெருமானாரைக் கொண்டு பஞ்ச ஸம்ஸ்காரம் செய்வித்தாள். உடையவரும் அவளின் ஆசார்ய பக்தியைக் கண்டு உகந்தவராய், அங்கேயே நாலைந்து நாட்கள் தங்கி த்ரிதண்ட காஷாயாதிகளை கொண்டு வரச்செய்து அவைகளைத்தம் ஆராதனப்பெருமானிடம் சமர்ப்பித்து மீண்டும் தரித்துக்கொண்டு, கொங்கில் பிராட்டியையும் அவள் புருஷனையும் ஆசிர்வதித்து மேல்நாட்டுக்குப் பயணமானார்.

கூரத்தாழ்வானின் குமாரர் பட்டர் எனப்படும் புகழ்பெற்ற ஆசாரியர் அவர் மஹா மேதாவியான ஒரு அத்வைத வேதாந்தியை வாதில் வென்று, வைஷ்ணவராக்கினார். அவர் பட்டரின் சீடராகி, துறவறம் பூண்டு நஞ்ஜீயர் என்று வழங்கப்பெற்றுர். ஒரு சமயம் பட்டர் பல்லக்கில் எழுந்தருள, ஸந்நியாஸியான நஞ்ஜீயர் அப்பல்லக்கை எடுக்கப்புக, பட்டர் அது தகாது என்று தடுக்க, நஞ்ஜீயர் ஆசார்யகைங்கர்யத்திற்கு ஸந்யாஸம் விரோதமாக இருக்குமேயானால், அதைவிட்டு விடுகிறேன் என்றுர். ஆக ஆசார்யகைங்கரியத்திற்கு எந்த தர்மம் குறுக்கே வந்தாலும் அது விடத்தக்கது என்பதுதான் நஞ்ஜீயரின் திருவுள்ளம். ஆசார்யன் உபயோகத்திற்காக ஒரு நந்தவனம் அமைத்து, அதில் பூக்கும் புஷ்பங்கள் பட்டர் குடும்பத்துக்குப் போகத்தான், பெருமாளுக்கு என்று திட்டமிட்டு ஆசார்யனுக்காகத்தான் பகவத் கைங்கர்யமும் என்பதை விளக்கினார்.

நஞ்ஜீயரின் சீடர் நம்பிள்ளை என்ற புகழ்பெற்ற ஆசாரியர். இவர் காலக்ஷேபங்கள் கேட்பதற்கு ஜன ஸமூஹம் பெருந்திரளாகக் கூடும். காலக்ஷேபம் முடிந்து கோஷ்டி கலைந்தால் அப்பெருந்திரளைக் கண்டு 'நம்பிள்ளை கோஷ்டியா? நம்பெருமாள் கோஷ்டியா?' என்று கேட்பார்களாம். ஒரு சமயம் நம்பிள்ளை அடியார்களோடு திருவெள்ளறையிலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு திரும்பும்போது காவேரி வெள்ள ப்ரவாஹமாகப் பாய்ந்துக்கொண்டிருந்தது. அங்கு ஓடம் காணவில்லை, ஒரு பரிசில் மாத்திரமே காணப்பட்டது. வேறுவழியின்றி எல்லோரும் அதில் அமர்ந்தனர். பரிசில் நட்டாற்றில் சென்றுக்கொண்டிருக்கும்போது மழையும் பெய்ய ஆரம்பித்தது. பொழுதும் அஸ்தமித்து அக்கரை இக்கரை முன்னடி தெரியாமல் இருண்டுவிட்டது. இந்நிலையில் பரிசில் ஆடத்தொடங்க, பரிசில் ஓட்டுபவன் 'யாரேனும் தாழியிலிருந்து இறங்கினால் பத்திரமாய் கரை சேரலாம். இல்லையேல் பரிசில் மூழ்கிவிடும்' என்றுன். நட்டாற்றில் இந்நிலையில் இறங்குவதற்கு எவருக்கும் துணிவு ஏற்படவில்லை. அவ்வளவிலே ஒரு ஸாத்விகையான அம்மையார் (நம்பிள்ளையின் சிஷ்யை) தாழி ஓட்டு

மவனை நோக்கி "நீ நூறுப்ராயம் இருப்பாய். உலகங்கட்கெல்லாம் ஒருயிரான நம்பிள்ளையைப் பேணிக்கொண்டு கரையில் விடு' என்று ஆசிகூறி ஆற்றிலே குதித்துவிட்டாள். பரிசிலும் கரைசேர்ந்து எல்லோரும் பத்திரமாய் கரை ஏறினர். நம்பிள்ளை கரைசேர்ந்ததும் 'ஒரு ஆத்மா தட்டுப்பட்டு போச்சுதே' என்று கூறிக்கொண்டே கவலையோடு சோர்ந்து போனார். அம்மையார் குதித்தவுடன் நாலடி தூரத்திலேயே ஒரு மேட்டுதிடரில் ஒதுக்கப்பட்டு உயிர் தப்பினாள். அதுவும் கரைக்கு அருகே இருந்தபடியால் நம்பிள்ளையின் வேதனைக்குரலைக் கேட்டு அவ்வம்மையார் 'ஸ்வாமின்! தேவரீர் வ்யாகுலப்படவேண்டாம். அடியேன் இங்கு சுகமாக இருக்கிறேன்' என்று குரல் கொடுத்தாள். இதைக்கேட்ட நம்பிள்ளையும் தாழியையனுப்பி அவ்வம்மையாரை அழைத்துக் கொண்டார். அவ்வம்மையாரும் நம்பிள்ளையை நெருங்கி தண்டம் சமர்ப்பித்து 'ஆற்றிலேயும் தேவரீர் ஒரு கோரைமேடாய் வந்து அடியேனை ரக்ஷித்து அருளிற்றே' என்று விண்ணப்பித்தாள். இதனால் ஸ்வசரீர அர்த்தப்ராணங்களை அழித்துக் கொண்டாகிலும் ஆசார்யனை காக்கவேணும் என்ற நிஷ்டையுண்டாகவே, ஈச்வரன் அந்த சிஷ்யனை ரக்ஷிக்க கடமைப்பட்டவன் என்றாயிற்று.

நம்பிள்ளை திருமாளிகைக்கு பக்கத்தில் அவர் சிஷ்யையான ஒரு அம்மையாருக்குச் சிறிது நிலம் இருந்தது. நம்பிள்ளை திருமாளிகை காலக்ஷேபாதிகளுக்கு இடம் மிக நெருக்கமாய் இருந்தபடியால் அந்நிலம் கேட்கப்பட்டது. அவள் தனக்கு வேண்டும் என்று இசையவில்லை. இதை நம்பிள்ளையிடம் தெரிவித்ததும், அவர் அந்த அம்மையாரிடம் 'மிகவும் நெருக்கமாயிருக்கிறது. காலக்ஷேபம் கேட்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இடவசதியின்றி கஷ்டப்படுகிறார்கள். உம் ஒரு சரீரத்திற்கு ஸ்வல்ப இடம் போதாதோ. மீதி நிலத்தை தரலாகாதோ' என்று கேட்க, அவளும் அப்படியே செய்கிறேன், என்று சொல்ல ஒரு நிபந்தனையும் போட்டாள். தனக்கு பரமபதத்தில் ஒரு இடம் தந்தருள வேண்டும் என்று கேட்டாள். நப்பிள்ளை அதற்கு 'பரம பதம் அவனுடையது. ஆகிலும் அவனிடம் (வைகுந்தநாதனிடம் ) விண்ணப்பித்து தருகிறோம்' என்று பதில் கூறினார். இதைக் கேட்டு அவளும் 'அடியேன் ஸாது, அதுவும் பெண்பிள்ளை ஆகையால் திருவெழுத்து சாத்தித் தரவேண்டும் என்றாள். அவளுடைய நம்பிக்கைக்கு மிக வியந்து, இந்த வருஷம் 'இந்த மாதம் இந்த தேதியில் இந்த அம்மையாருக்கு திருக்கலிகன்றிதாஸன் (நம்பிள்ளையின் பெயர்) பரமபதத்திலே ஒருகோல் துறை எழுதிக்கொடுத்தேன். அகிலலோகஸ்வாமியும் அஸ்மத்ஸ்வாமியுமான ஸ்ரீவைகுண்டநாதன் கிரயஞ் செலுத்திக் கொடுத்தருளவேணும்' என்று சாஸனமெழுதித் தம்முடைய கையெழுத்துடன் கொடுத்தருளினார். அதன்படியே அன்றைக்கு மூன்றாம் நாள் அந்த அம்மையார் பரமபதம் அடைந்தாள். இத்தால், 'சார்யன் இரங்கி ப்ரஸாதித்ததொன்றையே தஞ்சமென்று இருக்கவேணும்; உபய வீபூதியும் ஆசார்யனிட்ட வழக்காயிருக்கும்' என்றாயிற்று.

(அடுத்தபடி தெரிவிக்கும் சம்பவம் 'ப்ரபந்நாம்ருதம்' என்ற நூலில் காணப்பெறுகின்றது.)

ஒரு சமயம் ராமாநுஜர் ஸ்ரீரங்கத்திலிருந்து திருமலைக்கு அடியார் குழாங்களுடன் புறப்பட்டு வழியில் அஷ்டஸஹஸ்ரக்ராமம் என்கிற இடத்தில் தங்க நிச்சயித்து அங்கு இருக்கும் இரு சிஷ்யர்களுக்கு முன்கூட்டி தகவல் தெரிவிக்க இருவரை அனுப்பிவைத்தார். அவர்களில் யஜ்ஞேசர் என்பவர் தனிகர். அடுத்தவர் வரதர் என்பவர் பரம ஏழை. முதலில் யஜ்ஞேசரிடம் சென்ற சிஷ்யர்களை அவர் சரிவர நடத்தாமல் அமுது செய்வித்தல் முதலிய உபசாரங்கள் செய்யாமல் அவர்களிடம் எம்பெருமானார் வருகையை தெரிந்து கொண்டு அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்வதில் கவனம் செலுத்தலானார். இதை அறிந்த ராமாநுஜர் தம் சிஷ்யர்களை சரியான முறையில் ஆராதிக்காத யஜ்ஞேசனை தவிர்த்து, ஏழையான வரதார்யர் க்ருஹத்திற்கு சீடர்களுடன் எழுந்தருளினார். வரதாசார்யருக்கு எம்பெருமானார் வருகை தெரியாது. அதுசமயம் அவரும் வீட்டில் இல்லை. அவருடைய மனைவி எம்பெருமானார் குரல்கேட்டு மேலாடை இல்லாமையால் உள்ளேயிருந்தே தன்பர்த்தா க்ருஹத்தில் இல்லை என்று கூறி தன் நிலைமையையும் வெளியில் வர முடியாத நிலையையும் குறிப்பாக உணர்த்தினாள்.

இதையறிந்த ஸ்வாமி எம்பெருமானார் தம் ப்ரபன்ன பாகையை (திருமுடியில் தரிக்கும் வஸ்த்திரம்) உள்ளே வீச, அத்தால் உடலை போர்த்திக் கொண்டு வெளியே வந்து

கோஷ்டியை தண்டம் சமர்ப்பித்து, தன் கணவர் உஞ்சவ்ருத்திக்கு சென்றிருப்பதாகவும், சீக்கிரம் திரும்புவார் என்றும் இடையில் ஸ்வாமியும் சீடர்களும் அனுஷ்டானம் முடித்துக் கொண்டு திரும்பி எழுந்தருளி இங்கு அமுது செய்யவேண்டும் என்றும் வினயமாக ப்ரார்த்தித்தாள். அதுகேட்டு அவர்களும் அனுஷ்டானத்திற்கு சென்றனர். வீட்டிலோ ஒரு பொருளும் இல்லை. என்ன செய்வது என்று யோசித்தாள். அவ்வூரில் அவள்மேல் மையல் கொண்டு ஒரு வியாபாரி தனிகன் தனக்கு இசையுமாறும், ஆடை ஆபரணங்களாக ஆசை காட்டிக்கொண்டு வெகுநாளாக அலைகிறன். அவள் யோசித்தாள். உடல், பொருள், ஆவி எல்லாம் ஆசார்யனுக்காகவே உள்ளது. அவர் கைங்கர்யத்துக்கு பயன்படாத இவ்வுடல் நமக்கு என்ன பயன். ஆகவே சரீரத்துடன் கூடிய கற்பை ரக்ஷிப்பதைக் காட்டிலும், ஆசார்ய கைங்கர்யத்துக்காக அதை விடுதல் என்று முடிவு செய்து, அந்த தனிகனிடம் வலியச்சென்று தமக்கு ததீயாராதனுக்கு பொருள் வேண்டும் என்றும் அவன் விருப்பப்படி இசைவதாகவும் சொன்னாள். அவனும் ஆச்சரியப்பட்டு ஸகல பொருள்களும் அனுப்பிவைக்க உயர்ந்த ததீயாராதனை ஏற்பாடாகியது. வெளியில் சென்ற வரதாச்சாரியர் எல்லா விவரங்களையும் அறிந்து தம் தேவி செய்ததை ஆமோதித்துக் கொண்டாடினார். பிறகு எம்பெருமானார் எழுந்தருளியவுடன் மிக்க கௌரவமாக விருந்து முடிந்து, அவர்களுக்கு ஸ்ரீபாததீர்த்தம் ஸாதித்து அவர்களின் தாம்பத்ய பெருமையைப் பாராட்டி ஆசீர்வதித்தார். பிறகு அத்தம்பதிகள் அந்த தனிகனின் வீட்டுக்குச் சென்று எம்பெருமானாரின் ஸ்ரீபாத தீர்த்தத்தையும் அமுது சேஷத்தையும் அவனுக்கு கொடுத்தனர். அதை ஸ்வீகரித்தவுடனே அந்த காமுகனுக்கு நல்லெண்ணம் உண்டாகி, அவர்களை ஸேவித்து தன் அபராதத்திற்கு மிக்க வருந்தி, கடைசியில் எம்பெருமானாரின் சீடராகி விட்டான். ஆக இச்சம்பவங்களில் ஒவ்வொன்றிலும் ஒரு விசேஷமான ஆசார்யபக்தி வெளிவருகின்றது. தொடர்ச்சியாகவும், போற்றப்படுகின்றது. இதைத்தான் ஸம்பிரதாயத்தில் பஞ்சமோபாயநிஷ்டை என்றும் சரமபர்வநிஷ்டை என்றும் சிறப்பிக்கப்படுகிற ஆசார்ய நிஷ்டை என்பர்.

குருரேவபரம் ப்ரஹ்ம,. குருரேவ
பரம்தனம்
குருரேவபர: காம: குருரேவ
பராயணம்
குருரேவபராவித்யா, குருரேவ
பராகதி:
யஸ்மாத் ததுபதேஷ்டாஸௌ
தஸ்மாத்குருதரோகுரு: ॥



## சரணுகத வத்ஸலன்

ஸ்ரீமந் நாராயணன் தன்னுடைய அடியார்களைக் குறித்து பிறர் ஏதேனும் குறை கூறினால் அதற்குச் செவி சாய்க்கமாட்டான். அவன் பக்தவத்ஸலன் பரமதயாளன். ஸ்ரீமகாலக்ஷ்மியே குறைகூறினாலும் அவன் தன் அடியார்களைக் கைவிடான். "என் அடியார்கள் தவறு இழைக்க மாட்டார்கள். ஒருகால் அவர்கள் தவறு இழைத்தாலும் அது நன்மையாகத்தான் முடியும்" என்று வாதமிடுவான். பக்தர்கள் மீது அவன் காட்டும் பிரேமையை - கருணைக்கடலாய் விளங்கும் கோலத்தை ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் நாம் கண்கூடாகக் காணுகிறோம். தன்னடி பணிந்தவனான விபீஷணன் பொருட்டு தனது மலர்க்கண்ணுல் தென்திசை இலங்கை நோக்கும் அழகினை நாம் கண்டு மகிழ்கின்றோம். இதனைப் பெரியாழ்வார் பக்திப் பரவசத்துடன் பாடுவதைக் கேளுங்கள்.

தன்னடியார் திறத்தகத்துத்
தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்
என்னடியார் அது செய்யார்
செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்
மன்னுடைய விபீடணற்கா
மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண் வைத்த
என்னுடைய திருவரங்கற் கன்றியும்
மற்றெருவர்க்கு ஆளாவரே?

தொகுப்பு :திரு. ஆர். சுப்பாராவ் - திருக்கோவலூர்.





# NAVAJEEVAN BLIND RELIEF CENTER (REGD.)

**(FREE H OME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503.

"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"
**வணக்கம்.**

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர்-பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்கள், கடந்த 19 வருடங்களாக அளித்துவரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் சுமார் 95 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறுர்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருத்துவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணித்துள்ளோம்.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் பார்வை யற்ற குழந்தைகளுக்கு தினந்தோறும் மூன்றுவேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும் ஒருநாளில் (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப்பெற வேண்டுகிறோம்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் எங்கள் ஆச்ரம வளா கத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிச்சலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G)

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்" ஸ்வாமி விவேகானந்தா.

தலைமை அலுவலகம் :
நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

நாராயண ஸேவையில்
K.S. ஆசார்யா
Founder / President

கிளைகள் : பத்ராசலம் (ஆ.பி.) வாரணஸி (உ.பி.)

(தொடர் கட்டுரை)

# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## போ

போக்கடி - கதி, உபாயம், பரிஹாரம், போக்கணம் கெட்டவன் என்பது போக்கட போக்கிடம் என்பதாகும்.

போக்கி - ஒழிய; பற்ற

போக்குவிக்கும் - போம்படியாகப் பண்ணும்

போக்குவிட்டு - வழிவிட்டு

போக்கொழிந்தார் - கால்வாங்கிப் போகமாட்டாதபடியாய் விட்டார்கள்

போகக்கொண்டு - போனால், போனதால்

போகப்பற்றி - போய்

போகப் புணர்ந்து - போகப்பண்ணிற்று

போகமகள் - போக யோக்யமானபெண் போகம்-அநுபவம்

போக மகிழ்ச்சி - அநுபவத்தினுடைய வ்ருத்தி

போக மயக்குகள் - கலவியால் பிறந்த மகிழ்ச்சி (மயக்கு-ஆனந்தம்)

போகமுண்பார் - போகத்தை அநுபவிக்கப் பெறுவர்

போகமூர்த்தி - போகயோக்யமான மூர்த்தி

போகமூழ்கி - போகத்திலே ஈடுபட்டு

போகலொட்டேன் - போகவிடமாட்டேன்

போகாமல் காத்து - போகாமல் தடுத்து

போகாய் - போகிறதில்லை

போகி - அநுபவிக்கிறவன்; பாம்பு

போகிடில் - போனால்

போகு - போ, போவாய்

போகுறில் - போகவேண்டில்

போகுங்கால் - வருங்கால்

போகே - போகுவுக்கு ஏகாரம் போயேன் என்று நாம் கொச்சையாகச் சொல்லுவதில் சுத்தி

போகே என்று - போய்ச்சேர் என்று அறிவித்து

போகேல் - போகாதே

போங்கு - வழி

போங்கோள் - வாருங்கோள்

போச்சு - போயிற்று என்பதன் கொச்சைமொழி

போட்கன் - மனமில்லாதவன்; குணமில்லாதவன்; வெட்கம் கெட்டவன்; முறைகேடன்

போட்கனேன் - பண்ணறையன்; போழ்க்கமை - பண்ணறை, கதிக்கேடு - அடைவுகேடு,

போத்தந்த - வரவிட்ட, போத்த-போக்கின, அந்த-சுட்டு, போத்தந்த முழுச்சொல்லாய் அந்தாலும் போகவிட்ட என்றபடி

போத்தந்தார் - வரவிட்டனர், அனுப்பினர்

போத்துகை - வாங்குகை

போத - போக, போதுக

போதகம் - யானை, குட்டி, கன்று

போகக்கண்டீர் - வரக்கண்டீர்

போதந்த - போகவிட்ட, வரவிட்டாரென்றபடி

போதமர் செல்வக்கொழுந்து - தாமரையில் அமர்ந்து செல்வச் செழிப்பை உடைய பெரிய பிராட்டி; பங்கயச் செல்வி

போதர்கண்டாய் - விரைந்து ஓடிவா. போதரு என்பது போதர் என்று நிற்கிறது- வாகிடாய் என்பது பொருள்; போதல் என்பதில் உள்ள 'ல்'வுக்கு 'ர்'. கண்டாய் என்றது சொல் நிரப்பமாதல். பரிபவம் கண்டாய் என்று பொருள் பெற்று முடிவாதல். இங்கே பொருகிடாய் என்று பொருள்

போதர - புறப்படும்படியாக; மிகவும்

போதராது - பொருந்தாது, வாராது

போதராய் - வாராய்

போதரிக்கண் - போது-மலர், அரி-வண்டும், மானும். போது, அரி இரண்டு போலும் உள்ள கண், போதை அரிக்கின்ற- மலரோடே சீறுபாறு என்னும் கண்

போதருகாலம் - வருங்காலம்

போதருகின்றேன் - புறப்படுகின்றேன், வருகிறேன்

போதருமாபோலே - வருமாபோலே

போதரே - வாராய்

போதலர் - செவ்விப்பூ

போதவிழ்நீலம் - போதிலே-காலத்திலே மலர்கிற பூ, கருநெய்தல்

போதவுந்த - மிகவும் தள்ள
போதரிந்து - பூக்கொய்து
போதறிந்து - காலம் அறிந்து
போதரேன் - வரமாட்டேன்
போதன் - பூவையுடையவன்
போதாது - போராது; பற்று து
போதாய் - எழுந்தருளாரோ
போதாவாறு - போதாததாயிருந்தபடி
போதான இட்டி-றைஞ்சி - போதான-போதெல்லாம் எதுவானாலும் அதையெல்லாம் இட்டு-சமர்ப்பித்து, இறைஞ்சி-துதித்து
போதி - போகிறுய், போகாநிற்புதி; போகக்கடவை; அரசமரம்.
போதிகண்டாய் - போகாநின்றுய்; போகநிற்றி கிடாய்; போகிறுய்
போதியார் - அரசின் கீழே இருப்பவர்கள் பௌத்தர்
போதில் கமல வன்-னெஞ்சம் - போதம்-ஞானம். இல்-இருப்பிடம், ஞானத்துக்கு இருப்பிடமான கமலம், இருதயகமலம், ஞானத்துக்கு இருப்பிடமான கமலமாகிற வன்னெஞ்சம். நெஞ்சுக்கு வன்மையாவது அந்தர்யாமியையும் அறியமுடியாமை
போதில்மங்கை - பெரியபிராட்டி
போதில் வைத்த-தேன் - பூக்களில் உண்டான தேன்
போது - புதுப்பூ; அலருகிறபூ; வேளை காலம், சூரியன்
போதுங்கொலோ - வருவானோ
போதுசெய்கை - மொட்டிக்கை; அலருகை; காலம் தாழ்க்கை
போது செய்யாது- குறையாது;
போது செய்யுமது- விகாரப்படுமது, நாட்பட நாட்படக்குறைவது
போது போகின்றி- போதுபோக்காமல்-தாழ்த்தாமல், சீக்கிரமாக,
போதும் - போது; சரியாகும்
போது மறுத்து - காலம் தப்பி;
போதுமாகில் - வந்தானாகில்
போதுமான - வந்தானாகில்
போதுமின் - போங்கோள்
போதுமே - கூடுமோ; போருமோ
போதுமோ - போகுமா
போதுவாய் - வரக்கடவாய்
போதுவார் - புறப்படுவார்
போதுவீர் போது-மினோ - போகவிருப்பமுள்ளவர்கள் போங்கள்; வரவிருப்பம் உள்ளவர்கள் வாருங்கள் என்றும் சொல்லலாம்.
போது உள்ளம் - மனமே நீ போ

போதெல்லாம் - எல்லாக்காலமும்
போதொடு நீரேந்தி - மலரோடு தீர்த்தத்தையும் எடுத்துக்கொண்டு
போதை - போது
பொதொருகால் - ஒருக்ஷணகாலமும்
போதோடே - போது இருக்கும்போதே, சீக்கிரமாக
போந்த - வந்த; பல இடங்களில் துணைச்சொல்லாய்-போந்த சக்கரவர்த்தி- என்றுவரும். போன என்றும் பொருள்
போந்தருளாய் - வந்து காப்பாற்ற வேண்டும்.
போந்த வெண்டிங்-கள் - அப்போது தோன்றின சந்திரன்
போந்தனையும் - போகும் வரையில். ஆந்தனையும் என்பது ஆகும் வரையில்
போந்தாய் - வந்தாய்
போந்திடு - வந்துவிடு
போந்தில - வரவில்லை; புறப்படவில்லை; உண்டாகவில்லை; வளரவில்லை
போந்திலதோம் - உண்டாகப்பெறுத நாங்கள்
போந்து நின்றுன் - வந்துவிட்டான்
போம் - போகும்
போம்வழி - நடக்கிற நீதி
போமது - போகிற அது, போவது
போமிடத்து - போமளவில்
போமிளநாகம் - போகிறதோர் இளநாகம்
போரீர் - போங்கள்
போய் - மிகவும்; போர என்று பொருள்; முழுமையாக; பூரணமாக
போய்த்தாயிற்று - போயாயிற்று
போய்த்தாழ்ந்தான்- போய்வரவு விளம்பித்தான்; போனவிடத்திலே தாமதித்தான்;
போய்ப்பாடுடைய - மிதவும் இடமுடையன; மிகவும் புகழுடையன
போய்த்து - போகிறது என்றபடி
போய்த்தோற்றற்ற - மிகவும் தோய்ந்தற்றபடி
போய்மருளூற்று - மிகவும் அறிவுகெட்டு
போயகல - விட்டோட
போய காலங்கள் - கடந்த, போன காலங்கள்
போய பிழை - கழிந்து போன பாபங்கள்
போயவன் பால-மாய் - போன அவன் பக்கல்
போயிற்றது - போனது
போயின நெஞ்சம் - போன நெஞ்சம்
போயினால் - போனால்
போயும் வந்தும் - மீண்டும் மீண்டும்
போயினால றையோ - விட்டுப்போக நினைத்தாயாகில் அறையோ-அறை. அறையோ முறையிடும்

சொல். ஜய சந்தோஷங்களைப் பற்றி வரும் குறிப்புச்சொல்

போயொன்று - மிக்வும் ஒன்று; மேல்மேல் ஒன்று

போர் - யுத்தம்; ஆயுதம்; நெல்லுப் போர்

போர்க்கதவம் - அடைக்கமுடியாதபடி பொருகின்ற கதவு; இரட்டைக் கதவு

போர்க்கெண்டை - பொருகிறுப்போலே இருக்கிற கெண்டைமீன்

போர்க்கோடு - போருக்குக் கருவியான கொம்பு

போர்க்கடாவரசர் - போரை நடத்துகிற அரசர்

போர்சுட்டுப்பொரி கொறிக்கை - நெல்லை அடையமுடியாத ஒருவன் நெற்கதிர்ப் போரை வழியல்லாதவழியில் கொளுத்தி, அதில் வெந்த நெற்பொரிகளைக் கொறிக்கை-தின்கை; பொரி பொரித்துக் கொரிக்கும் சிறிய செயலுக்காக பெரிய போரை, வைக்கோல் போரைக் கொளுத்துகை

போர்த்தல் - மூடுதல்

போர்த்த பிறப்பு - ஆத்ம ஸ்வரூபம் தெரியாதபடி மறைக்கும் பிறவி

போர்த்தமுத்தின் குப்பாயம் - போர்த்துக்கொண்டு இருக்கிற முத்துச்சட்டை

போர்ப்படி - சந்தனம் கலப்பதற்குக் கூலியாக சந்தனத்திலேயே ஒரு சிறு பாகம்

போர்ப்பதோர் பொற்படம் - போர்த்துக்கொள்ளும் பட்டு

போர்ப்பாடு - போருக்கு வேண்டிய பாடு-முயற்சி.

போர - உண்டாக, பார

போர நெருக்குண்புதி - மிகவும் நோவு படுகிறுய்

போரப்பொலிய - அதிகமாக; மிகவும் செழுப்பாக

போரச்சொன்னான் - மிகவும் விளக்கமாகச் சொன்னான்

போரவிடாய் - தந்தருளவேண்டும்; அதிகமாக நீளமாக விடு

போரவிட்டிட்டாய் - மிகவும் அலக்ஷியப்படுத்தி விட்டாய்

போர விடுத்தவன் - அனுப்பினவன்

போரவுணன் - முரட்டு இரணியன்

போரவைத்தாய் - மிகவும் இட்டுவைத்தாய்

போருங்கொல் - மீண்டும் வருவாளோ; புகுருங் கொல்

போருகிடாய் - போகிடாய்

போருகை - வருகை; போகை

போருமாய்த்து - பூர்ணமாய்த்து; போதும்

போராய் - வாராய் - போதராய் என்பதின் விகாரம் போராய்

போரு - போ;

போராய்த்து வந்து - யுத்தத்தில் கையும் அணியும் வகுத்து வந்து

போருற்றவாடை - யுத்தத்திலே உற்ற, சமைந்த வாடை-காற்று

போல்வன - போல இருப்பன

போலாம் - போலே

போலேன் - போன்றநான்

போவதன்று - போகாது

போவதே நோயாகி - அதே நோயாகிப் போவது

போவான் போகின்ருன் - போவதே பயனாகப் போகின்றவன்

போலி - அஸாரம்; ஒப்பு, சமம்

போழ்க்கனேன் - முறைகேடனான அடியேன்

போழ்க - கீண்டு, பிளக்க

போழ்கின்ற திங்கள் - பிளவாநிற்கிற, கீண்டு கொடு தோற்றுகிற சந்திரன்; கிளறிக்கொண்டு தோன்றும் சந்திரன்

போழ்து - போது காலம்

போழ்து போக - போது போக்க

போழும் - போதுக்கும்; பீறும்

போழ்ந்து - குட்டமிட்டு; கிழித்து,

போற்றுதல் - புகழ்தல்

போற்றுதற்காமகன் - போற்றுவதற்குத் தகுதியான புருஷன்

போற்றும் பொருள் - மங்களாசாசனம் பண்ணும் பயன்

போன் - பொறி, கூடு, யந்திரம், எலிப்பொறி, எலிப்போன் ஒன்று சொல்லுவர்.

போன்றேன் - போல ஆனேன்

போனகம் - திருப்போனகம்; பெரியோர் அமுது செய்த உணவு

போகைப்பெட்டி - பெட்டிமேல் பெட்டியாய் சாப்பாடு வைக்கும் அடுக்கு.

போனாரிருந்தார் - போனவர்களும் இருந்தவர்களும்

போனாற்படுவதைத்தான் படப்பெற்றேனோ - பிரிந்துபோனால் முடியப் பெற்றேனோ

பௌவம் - கடல்

பௌழியன் - ருக்வேதி, பிருகதாரண்ய உபநிடதம் அறிந்தவன். ஒரு சோழனுக்குப் பெயர்

பௌராணிகர் - இராமாநுசரின் பெயர்

(தொடரும்)

# ஸ்ரீ ஆளவந்தார்

திரு. பஞ்சு. அரங்கநாதன்
ஸ்ரீரங்கம்.

## முன்னுரை :

ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் கி.பி. பத்தாம் நூற்றாண்டில் மிகச் சிறந்த ஞானியாக விளங்கியவர் ஆளவந்தார். ஸ்ரீராமாநுஜரின் குருவாகவும் மேலும் பல வைஷ்ணவ ரத்னங்களை உருவாக்கியும் பெரும் புகழ் பெற்றவர். ஆளவந்தார் வரலாற்றை இங்கு காணலாம்.

## அவதாரம் :

வீரநாராயணபுரம் (வீராணம்) ஸ்ரீரெங்கநாதமுனிவர் தான், அழிந்த நாலாயிரம் பாசுரங்களையும் மீட்க "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற மதுரகவி ஆழ்வார் பாசுரங்களை 12,000 முறை ஜபித்தார். நம்மாழ்வார் தோன்றி நாலாயிரம் பாசுரங்களையும் அருளிச்செய்தார். இவரையே "நாதமுனிகள்" என்று புகழ்கிறோம். இவரது மகன் ஈஸ்வரமுனிகள். ஆளவந்தார் தாது வருடம் ஆடிமாதம் பௌர்ணமி, உத்திராட நட்சத்திரத்தில் ஈஸ்வரமுனிகள் மகனாகப் பிறந்தார். இவரது பிள்ளைத் திருநாமம் "யமுனைத்துறைவர்" ஆகும்.

"மாயனை, மன்னுவட மதுரை மைந்தனை,
தூயபெருநீர் "யமுனைத்துறைவன்"
(ஆண்டாள் திருப்பாவை-5.)

## கல்வி கற்றல் :

குழந்தையை வேத அத்யயனம் செய்ய அனுப்பினர். தெய்வ அருள் பெற்ற குழந்தை ஒருமுறை கூறினாலே மறுமுறை தப்பாமல் கூறி தன் மேதா விலாசத்தைக் காட்டியது. இடையில் பாட்டனார் நாதமுனிகளும், தகப்பனார் ஈஸ்வரமுனிகளும் திருநாடு அலங்கரித்தனர். யமுனைத் துறைவரும் தாயார் விருப்பப்படி "மகாபாஷ்யபடடர்" என்பவரிடம் வேதம் பயின்று வந்தார்.

## ஆக்கியாழ்வான் ஆணவம்

மதுரை பாண்டிய மன்னன் அரசவையில் தலைமைப் புரோகிதன் வித்வத்னான கோலாகலன் என்ற ஆக்கியாழ்வான். இவன் ஆணவம் கொண்டு சாதுவான பிற வேத ஞானிகளை பயமுறுத்தி கப்பம் பெற்றுவந்தான். மகாபாஷ்யபட்டரையும் மிரட்டவே நம்முடைய யமுனைத்துறைவர் வாதம் செய்ய சகல மரியாதைகளுடன் அரசவை சென்றார்.

## கிழ யானையும், இளஞ்சிங்கமும் :

பாண்டியன் அரசவை நிரம்பி வழிந்தது. தலைமைப் புரோகிதன் ஆக்கியாழ்வான் கிழ யானையைப் போல சபையை நோக்கி ஆணவமாக தலையை ஆட்டியபடி நம் சிறுவரை பல கேள்வி கேட்டு திணற அடித்தான். யமுனைத்துறைவரும் பணிவாக பதில் அளித்தார்.

## மூன்றே கேள்விகள் :

நீண்ட விவாதம் முடிந்த பின் ஆணவம் நிறைந்த ஆக்கியாழ்வான் "ஏ சிறு பயலே நீ என்னை மூன்று கேள்வி மட்டுமே கேள்! அதுவும் நீ உண்டு என்று சொல்! நான் என் பேரறிவால் திறமையால் அதை இல்லை என்று மறுக்கிறேன். அத்துடன் உன் தலையை மொட்டை அடிக்கிறேன்' என்று கொக்கரித்தான்.

நம்முடைய இளஞ்சிங்கம் மூன்றை உண்டு என்றது.

1. ஆக்கியான் தாய் மலடி அல்ல.

2. பாண்டிய மன்னன் பேரரசன், புண்யவான்.

3. பாண்டிய அரசி கற்புடையவள்.

## ஆக்கியாழ்வான் தோல்வி :

ஆணவத் திமிரில் உண்டு என்பதை இல்லை என்று சாதிப்பேன் என்று கொக்கரித்தவன் தோல்வி அடைந்தான். பெற்ற தாயை மலடி என்பானா? ஆதரவு தரும் அரசனை பாவி என்பானா? ராணியை அவமதிப்பானா? தோல்வியை ஒப்புக் கொண்டான். அரசரும், அவையினரும் நமது இளைய சூரியன் யமுனைத்துறைவரையே எதிர் வாதம் செய்ய வேண்டினர்.

## தாயே மலடி :

தனி ஒருமரம் தோப்பு ஆகாது. அப்படியே ஒரு பிள்ளையை மட்டுமே பெற்றவளும் மலடி என்பதே மநுநீதி. ஆக்கியான் தாய் ஒரு பிள்ளை மட்டுமே பெற்றவள். எனவே அவள் மலடியே.

## மன்னன் பாவி :

கலியுகத்தில் பாவங்கள் அதி

கம். குடிமக்களின் பாவத்தில் மன்னனுக்கு பங்கு உண்டு. எனவே மன்னனும் பாவியே.

### அரசி கற்பு :

சாஸ்திரப்படி ஒரு பெண் கணவனை அடையும் முன் மந்திர வகையால் தேவர்களை சேர்கிருள். எனவே சாஸ்திர ரீதியாக கற்பை கூறமுடியாது.

### ஆளவந்தார் :

பெரும் பஞ்சு பொதியை ஒரு சிறு தீப்பொறி எறித்தாற்போல பல காலமாக பல வேத அறிஞர்களை கொடுமைப்படுத்திய ஆக்கியாழ்வானை ஆளவந்தார் யமுனைத்துறைவர். பாண்டிய அரசன், அரசியை ஆளவந்தார். அரசவையினரையும், பாண்டிய நாட்டு மக்களையும் ஆளவந்தார். மிக முக்கியமாக பின்னாளில் ஸ்ரீவைஷ்ணவ சாம்ராஜ்யத்தையே ஆளவந்தார். எனவே அனைவரும் யமுனைத்துறைவரை "ஆளவந்தார்" என்றே புகழ்ந்து போற்றினர்.

### பூமி ஆளும் சுவை :

பாண்டிய அரசனும் அரசியிடம் பந்தயம் போட்டபடி தன் தலைமைப் புரோகிதனை வென்ற ஆளவந்தாருக்கு தன் ராஜ்ஜியத்தில் பாதியை தந்து கவுரவித்தான். ஆளவந்தாரும் செம்மையாக அரசாண்டு வந்தார். ஆனால் ஆளவந்தாரின் திரு அவதார நோக்கம் ஸ்ரீவைஷ்ணவ நிர்மாணம் அல்லவா. எனவே பாட்டனார் நாதமுனிகளின் சீடர் மணக்கால் நம்பி ஆளவந்தாரைக் கண்டு விபரம் கூறவந்தார். ஆனால் அரசரைக் காண முடியவில்லை.

### தூதுவேளைக்கீரை :

அரண்மனை சமயைற்காரரிடம் விசாரித்து அரசர் ஆளவந்தாருக்கு தூதுவேளைக்கீரை மிகவும் விருப்பம் என்று தெரிந்து கொண்டு தொடர்ந்து ஆறுமாதம் கீரை கொடுத்து வந்தார். நம்பி அதன் பிறகு கீரையை தரவில்லை. கீரை ருசி கண்ட அரசர் ஆளவந்தார் விசாரித்து உண்மை அறிந்தார். கீரை கொண்டு வந்தவர் மீண்டும் வந்தால் தன்னிடம் அழைத்து வர உத்தரவிட்டார். அவ்வாறே மணக்கால் நம்பிகளும் அரசரை சந்தித்தார். கீரையை விட பல கோடி மடங்கு ருசியான பொருள் பாட்டனார் நாதமுனிகள் சொத்தாக பேரனுக்கு உள்ளது என்று கூறி இரண்டு ஆற்றின் இடையில் ஆயிரம் தலைப்பாம்பின் மேல் காக்கப்படும் பெருநிதியை மணக்கால் நம்பிகள் ஆளவந்தாருக்கு காண்பித்தார்.

"குடதிசை முடியைவைத்து,
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்புகாட்டி, தென்திசை
இலங்கை நோக்கி
கடல் நிறக்கடவுள் எந்தை, அரவு
அணைத்துயிலுமாகண்டு
உடல்எனக்கு உருகுமாலோ!
என்செய்கேன்? உலக்திரே!
(தொண்டர் அடிப்பொடிஆழ்வார்
திருமாலை-பாடல் 19)

### அரசர் ஆண்டியானார் :

அர்ச்சா ஸ்வரூபியான அரங்கநாதனும் கடலினும் பெரியவான தனது திருக்கண்களை அகல விரித்து அரசர் ஆளவந்தாரை பார்த்தான். எந்த அருட் கண்களின் பார்வைக்காக ஞானிகளும், முனிவர்களும், தேவர்களும், ரிஷிகளும் ஏங்கி நிற்கிருர்களோ அந்த அருட் பார்வை அரசர் ஆளவந்தாரை நிலை குலையச் செய்தது. "என் அமுதனைக் கண்ட கண்கள் மற்ருென்றினைக் காணுவே" என்ற திருப்பாணுழ்வாரின் பாசுரம் ஆளவந்தார் வாழ்வில் உண்மையானது. அரசர் எல்லாவற்றையும் துறந்து துறவறம் மேற்கொண்டு காஷாய திரிதண்டங்களைப் பெற்று வைஷ்ணவ சாம்ராஜ்ஜியத்தையே ஆளவந்தார் ஆண்டியானார்.

### யோகம் பெருமை :

மணக்கால் நம்பிகள் ஆளவந்தாருக்கு பகவத்கீதை, சரம சுலோகம், நாலாயிரம் போன்ற எல்லாவற்றையும் உபதேசித்து திருநாடு சென்ருர். நம்பி உத்தரவுப்படி யோகம் கற்கவேண்டிய ஆளவந்தார் குருகை காவலப்பனிடம் சென்ருர். அவரும் ஒரு நல்லநாள் குறித்து அன்று வரச்சொன்னார். ஆனால் அச்சமயம் ஆளவந்தார் திருவனந்தபுரம் பத்மநாபனை தரிசித்து வந்தார். குருகைக்காவலர் குறித்த நாளில் சென்று யோகம் கற்க முடியவில்லை. அன்று முதல் ஸ்ரீவைஷ்ணவத்தில் யோக மார்க்கம் விடுபட்டது.

### சீடர்கள் :

ஸ்ரீவைஷ்ணவ சாம்ராஜ்ஜியாதிபதியாக விளங்கிய ஆளவந்தார், திருக்கோட்டியூர் நம்பி, பெரிய நம்பி, பெரிய திருமலைநம்பி, திருமலையாண்டான், திருவரங்கப்பெருமாள் அரையர், திருக்கச்சி நம்பி, மாறனேரி நம்பி போன்ற பல சிறந்த சீடர்களைக் கொண்டு இருந்தார். பாஷ்யகாரர் ஸ்ரீராமானுஜரும் சீடரே.

### ராஜபிளவை நோய் :

இளமையில் உலக அரசராகவும் பிறகு ஸ்ரீவைஷ்ணவ சாம்ராஜ்ய சக்கரவர்த்தியாகவும

விளங்கிய ஆளவந்தார் முதுமையில் ராஜபிளவை நோயால் பாதிக்கப்பட்டார். கர்மவியாதியால் துன்புற்றார். மாறனேரிநம்பி சிலகாலம் நோயின் கடுமையை தனக்கு மாற்றிக் கொண்டார். இருப்பினும் விரைவில் ஆளவந்தார் திருநாடு அலங்கரித்தார்.

### மூடாவிரல்கள் மூன்று :

பள்ளிப்படுத்துவதற்காக இருந்த ஆளவந்தாரின் வலது கையில் மூன்று விரல்கள் மூடவில்லை. ஸ்ரீராமானுஜர் காஞ்சியிலிருந்து வந்து ஆளவந்தாரின் மனக்குறைகள் மூன்றையும் தானே தீர்த்து வைப்பதாக உறுதி அளித்தார். உடனே விரல்கள் மூன்றும் தாமே மூடின. ஸ்ரீவைஷ்ணவத்தின் அடுத்த ஆசார்யனாக ராமானுஜர் கிடைத்தார்.

### முடிவுரை :

ஆளவந்தார் ஒரு அவதார புருஷர். நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு அவர் ஆற்றிய தொண்டுகள் பற்பல. ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்னமே கோவிந்தனைத் திருத்தி எம்பார் ஆக்கியது. ஆளவந்தாரே ராமானுஜரை உலகிற்கு காட்டியவர். நம்முடைய ஆச்சாரிய மரபில் ஆளவந்தார் முக்கிய இடம் பெறுகிறார். ஆளவந்தார் திருவடிகள் வாழ்க!



# ஸ்ரீ கண்ணன் வரக்காணேனே!

திருமதி. கே. ராஜலக்ஷ்மி - நங்கநல்லூர்.

"சூரியன் மேற்குத் திசையில் மறைந்து விட்டானே! அஸ்தமனமாகி விட்டதே! பசுக்களையும் கன்றுகளையும் புல்வெளியில் மேய்க்க இடையர்களுடன் ஓட்டிச் சென்ற ஸ்ரீகிருஷ்ணன் இன்னும் வீடு திரும்பவில்லையே! வழக்கமாகக் கோபாலன் இந்நேரம் திரும்பி வந்திருப்பானே! மாய்மால மணிவண்ணன் மாதவன் ஏன் இன்னும் வீடு திரும்பவில்லை. இவ்வாறு தனக்குள் புலம்பியவர் யார் தெரியுமா? பன்னிரெண்டு ஆழ்வார்களில் ஒருவரான நம்மாழ்வார் தான்! ஸ்ரீகண்ணனின் மேல் அன்பும் ஆசையும் பாசமும் பக்தியும் கொண்டு, ஓயாமல் ஒழியாமல் கண்ணனின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டே அந்த தாமோதரனை நினைத்துக் கொண்டே இருந்த பரந்தாமனின் பரமபக்தன் அவர்.

'கண்ணன் கழலினை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம்-
திண்ணம் நாரணமே"

என்று கூறுகிறார், வேதம் தமிழ் செய்த மாறன் நம்மாழ்வார்.

ஸ்ரீகண்ணனிடம், நம்மாழ்வார் நேசமும், ஏன் காதலும் கூடக் கொண்டு விளங்கினார். சதா சர்வகாலமும் தான் உண்ணும் சாதத்திலும், பருகும் நீரிலும் தன் உள்ளங்கவர்ந்த கண்ணனைக் கண்டு உள்ளமுருகினார். உள்ளமும் உடலும் சோர்ந்து, மெலிந்து உருகிப்போனார. பிருந்தாவனத்துப் பராங்குச நாயகியாகத் தன்னை நினைத்து, பரமன், ஆடல் பாடல்களில் மதி மயங்கி நேசங்கொண்டு, தன்னை மறந்தாடிய கோபியர் நிலையிலும் தன்னைப் பாவித்து, அந்த காளிங்கநர்த்தனன் மேல் காதல் கொண்டு கசிந்துருகி, அக்கண்ணனில் திருமுகத்தை ஆசை தீரக் காணத்துடித்தார். அந்தப் பரவச நிலையை, தன் கண்ணனைத்தான் மோஹித்த நிலையைத் தன் விரஹதாபத்தை,



ராதை கண்ணனிடம் காட்டிய அத்யந்தப் பிரேமையைத் திருவாய்மொழியிலும், பாசுரங்களிலும் தெளிவுப்படுத்தினார்.

கண்ணனைப் பார்க்க ஏங்கினார் நம்மாழ்வார். இயலாததால் அவருக்கு மனச்சோர்வும், ஆற்றாமையும் வருத்தமும் தோன்றியது. கண்ணனது லீலைகளிலும், புல்லாங்குழல் இசையிலும் காளிங்க நர்த்தனத்திலும், தங்களது உள்ளத்தைப் பறிகொடுத்த பிருந்தாவனத்துக் கோபிகைகள் பட்ட துன்பத்தையும் ஏமாற்றத்தையும் நம்மாழ்வார் பாடுகிறார்.

பகல் நேரத்தில், பசுக்களையும், கன்றுகளையும் மேய்க்க புல்வெளிக்கு கோபாலன் தன் தோழர்களுடன் கட்டுச் சாதத்துடன் அழைத்துச் சென்று, மாலை வீடு திரும்புவரை வாய் விட்டுச் சொல்ல முடியாத துயரமடைகிறார்.

ஒருநாள் மாலை நேரம். பசுக்களும், கன்றுகளும் மட்டும் கண்ணனுடன் சென்ற இடையர்களுடன் வீடு திரும்பின. ஆனால் கண்ணனோ? வரவேயில்லை. கோவிந்தனை, அந்தக் கோபாலனைக் காணாத நம்மாழ்வாரோ உள்ளம் நைந்தார். அவருக்கு ஏற்பட்ட துக்கத்தினாலும், ஏமாற்றத்திலும் நீர் கன்னங்களை நினைத்து, ஆறுகப் பெருகி வழிந்தது.

பசுக்களின் கழுத்தில் கட்டியிருக்கும் மணியின் ஓசை, மாலையில் மலரும் மல்லிகையின் மணம், வீசும் தென்றல், முழுநிலா, ஆறு சலசலக்கும் ஓசை, குயிலின் இன்னிசையாக எல்லாமுமே கண்ணனை, மதி மயக்கும் மாதவனை, கோபியர் உள்ளங்கவரும் கோபாலனை, பராங்குசநாயகியாகத் தன்னைப பாவித்த நம்மாழ்வாருக்கு, நினைவூட்டிக் கொண்டேயிருந்தது. தன் பேச்சினாலும், வெண்ணெய்யையும், தயிரையும், பாலையும் திருடித் தின்னும் கள்ளப்பார்வையாலும், நம்மாழ்வாரைக் கவர்ந்த கிருஷ்ணன் மேலிருந்த மோகம் ஆழ்வாரை வருத்தித் துன்பத்திலாழ்த்தியது. அவர் புலம்பித் தவித்ததை நம்மால் வார்த்தைகளில் வடிக்க முடியாது. "என் கண்ணன் வரக்காணேனே!" சூரியன் அஸ்தமனத்திற்குப் பிறகும், மாலை நேரம், வந்தும், அந்த மாய்மாலக் கண்ணன், தேவர்களும், பூலோக மாந்தர்களும் கண்டு பேரானந்தமடையும் மாதவன் தான் வராது, பசுக்களையும் கன்றுகளையும் மட்டும் தன் தோழர்களுடன் அனுப்பி விட்டு கோபாலன் என்னை இப்படி அலைக்கழிக்கிரானே, நான் ஆற்றாமை அடையும்படிச் செய்கிறானே!" என்று பசுக்களைப் பாதுக்காக்கும் தெய்வமான பரந்தாமனை, உலகம் காக்கும் பெருமாளான ஸ்ரீமந் நாராயணனைக் காணாது, ஏங்கி ஏங்கித் தவிக்கிறார்.

இராமாயணத்தில் கல்லாய் சபிக்கப்பட்ட அகலிகைக்குச் சாபவிமோசனம் கொடுத்து பெண்ணாக்கிய ஸ்ரீராமராகிய கண்ணனின் இளகிய மனம், என் விஷயத்தில் மட்டும் இப்படிக் கல்லாகி விட்டதே என்று வருந்தி உள்ளம் உருகினார். கண்ணனைக் காண கண் ஆயிரம் கூடப்போதாத நிலையில் என் இரு கண்களால் கூட அவனைப் பார்க்க முடியாத நிலையில், என்னை உருகவிட்டு விட்டு, அந்த மாயன், மாயமாய் எங்கு மறைந்திருக்கிறான்? ஏன் மாலையில் கூட வீடு திரும்பவில்லை? என்று கண்ணீர் உகுத்து அழுகிறார். கண்ணனை விட்டுப் பிரிந்து மனம் தத்தளித்த நிலையில் பராங்குச நாயகியாகத் தன்னைப் பாவித்து, ஸ்ரீகிருஷ்ணரின் மேல் தீராத காதல் கொண்டு, கசிந்துருகிக் கதறுகிறார் என்று ஆழ்வார் பாசுரங்கள், நம்மாழ்வார் ஸ்ரீகிருஷ்ணர் மேல் கொண்டிருந்த அன்பையும், பிரேமையையும், பக்தியையும், ஒருங்கே விளக்குகின்றன. இப்பாசுரங்களைப் படித்து அனுபவித்து, ஆனந்தித்து, நாமும் பரந்தாமனின் அனுக்கிரகத்திற்குப் பாத்திரமாவோமாக!



## ஆன்மாக்கள் எப்பொழுதும் தனித்து இராது எவ்வாறு?

நமது கண்கள் ஒரு சமயத்தில் ஒளியோடும், மற்றொரு சமயத்தில் இருள் உடலும் கூடியிருப்பது மட்டுமின்றி, எந்த சமயத்திலும் தனித்தேயிருப்பதில்லை. அதுபோல, ஆன்மாக்கள் ஒரு சமயம் மனத்திலேயும், மற்றொரு சமயம் இறைவனிடத்திலேயும் கூடியிருப்பது அல்லாமல், எப்பொழுதும் தனித்திருக்கவே மாட்டாது.

திருமதி. இரா. தெய்வ வீரலெக்ஷ்மி தூத்துக்குடி.

# கோயில் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் நலவாழ்விற்காக

## நன்கொடை விண்ணப்பம்

கோயில்கள் மக்களுக்கு ஆன்மீக இன்பத்தினை தந்திடுவது மட்டுமன்றி இந்தியக் கலாசாரத்தின், சனாதன தர்மத்தின் பெருமையை விளக்கிடும் வெற்றிச்சின்னங்களாக காலம் காலமாக விளங்கிவருகின்றன.

அர்ச்சகர்களுக்கும் மற்ற ஊழியர்களுக்கும் போதுமான ஊதியம் அளிக்க இயலாமல் போதிய வருவாயும் இல்லாத 20,000க்கும் மேற்பட்ட கோயில்கள் ஆந்திர மாநிலத்தில் உள்ளதென்பது மறைக்க முடியாத செய்தியாகும். பெரும்பாலான கோயில்களில் அர்ச்சகர்களுக்கு அளிக்கும் ஊதியம் கோயிலில் வருகின்ற அற்ப வருவாயின் மீது ஆதாரப்பட்டுள்ளமை வருந்தத்தக்க செய்தியாகும். இதனால் அர்ச்சகர்களும் மற்ற ஊழியர்களும் வறுமையின் காரணமாக அவர்களுடைய பிள்ளைகளுக்குத் தகுந்த அடிப்படைக் கல்வியினைக்கூட அளிக்கமுடியாமல் செலவுகளைத் தாங்கிக் கொண்டு ஏழ்மையில் வாழ்கின்றனர்.

இந்திய உச்சநீதிமன்றத்தின் அறிவுரைப்படி ஆந்திர மாநில அரசு ஒரு குறிப்பிட்ட தொகையினை அதாவது ரூ. 75 கோடி கூட்டுநிதியாக தற்காலிகமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்றும், அத்தொகையினை உயர்ந்த நிலையில் உள்ள கோயில்களிலிருந்தும், மற்றும் அனுமதிக்கப்படும் மற்றைய வழிகளின் மூலமும் பெற்று ஒரு நலவாழ்வு திட்டத்தின் கீழ் இத்தொகையினை அறநிலையத்துறையின் மேற்பார்வையின் கீழ் செயல்படும் கோயில்களில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் இதர ஊழியர்களின் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்றும் ஆணை பிறப்பித்துள்ளது.

இத்திட்டத்தின்கீழ் கோயிலில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் குடும்பங்களுக்குத் தகுந்த வீடு, கல்வி மற்றும் ஆகம கல்வி போன்றவையும், மருத்துவ வசதியும், அவர்களுடைய பிள்ளைகளுக்குக் கல்வி வசதியும், அவர்கள் சொந்த வீடு கட்டிக்கொள்ள கடனுதவியும், கூட்டு காப்பீட்டுத்திட்டமும், எதிர்பாராத விபத்திற்கும், இறப்பு முதலானவைக்கும், விதவைகளுக்கு மறுவாழ்வு, காப்பகங்கள் அல்லது அவர்களுக்கு தேவையான பொருளுதவியும், படித்த வேலையில்லாத இளைஞர்களுக்கு பொருளுதவியும் அளிக்க இந்த நலவாழ்வு திட்டம் அமுலுக்கு கொண்டு வரப்படுகிறது. ஆந்திர மாநில அரசாங்கத்தின் விதிமுறைகளின்படி அவ் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழும் மேற்பார்வையிலும் இந்த நிதிதிட்டம் செயல்பட இந்திய உச்ச நீதிமன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டு இந்திய குடியரசு தலைவர் அவர்களால் 1-6-97-இல் இத்திட்டம் துவக்கி வைக்கப்பட்டது.

இது தொடர்பாக ஆந்திரமாநில அரசு வெளிநாட்டில் மற்றும் இந்தியாவில் உள்ள பல்வேறு நிறுவனங்களிடமிருந்தும் நன்கொடை கோரியுள்ளது. இவற்றிற்கு வருமானவரி விலக்கு கோரி வருமான வரித்துறை மற்றும் இந்திய அரசிடம் மாநில அரசு விண்ணப்பித்துள்ளது.

ஆகையால் அனைத்து அமைப்புகள், நிறுவனங்கள் மற்றும் இரக்க குணமுடைய பொதுமக்கள் அனைவரும் நன்கொடையாக தாராளமாக பொருள் தந்து உதவிடுமாறு ஆந்திர மாநில அரசு கேட்டுக்கொள்கின்றது. நன்கொடை அனுப்புவோர் தொகையினை கேட்பு காசோலையாகவோ அல்லது காசோலையாகவோ "அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்கள் நலவாழ்வு திட்ட நன்கொடை" என்று குறிப்பிட்டு "The Commissioner, Endowment Dept., Govt. of Andhra Pradesh, Hyderabad" எனும் பெயருக்கு எடுத்து அனுப்பவும்.

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீ ராமானுஜர்

திரு. மா. சீதாராமன் காஞ்சிபுரம்.

## பௌத்தர் வைணவராதல்

கூரேசரின் வெள்ளாடை தரித்துத் தப்பித்துச் செல்வதற்காக உடையவர் திருவரங்கத்தை விட்டு நீங்கிக் காடு ஒன்றில் ஒளிந்து வரலானார். அவருடைய சீடர்கள் ஒவ்வொருவராக அங்கு வந்து சேர்ந்தனர். கோவிந்தர், முதலியாண்டான், தனுர்த்தாசர் முதலானோர் பலரும் வந்து சேர்ந்தனர்.

கிருமிகண்டனால் தங்களுக்குத் துன்பம் ஏதும் வந்தணுகா முன்னம் சோழநாட்டு எல்லையைக் கடக்க முற்பட்டனர். உண்ணாது, உறங்காது, ஓய்வு எடுக்காது இரண்டே நாட்களில் சோழ நாட்டெல்லையைக் கடந்தனர். களைப்பின் மிகுதியால் அங்கிருந்த பாறை ஒன்றின்மேல் படுத்து உறங்கி விட்டனர்.

அப்பாறைக்கருகே வேடுவர் இருப்பிடம் ஒன்று காணப்பட்டது. அங்கே சேரி வாழ்மக்கள் இருந்தனர். பாறைமேல் களைத்துறங்கும் அவர்கள் பிராமணர்கள் என்பதை ஊகித்துணர்ந்தனர். உயர்ந்த உள்ளம் படைத்த அவர்கள் களைப்புற்ற பிராமணர்களுக்குக் கடிதின் உதவ முயன்றனர்.

கனிவகைகளில் சிறந்தவற்றைப் பறித்து வந்தனர். படுத்துறங்கும் அவர்கள் அருகில் அவற்றைப் பரிவுடன் வைத்தனர். குளிரால் நடுங்காவண்ணம் பக்குவமாகத் தீமூட்டினர். அவர்கள் உறங்கி எழும் காலம் நோக்கிக் காத்து நின்றனர்.

உடையவர் முதலானோர் உறங்கி எழுந்தனர். உறங்



கியதால் அவர்களின் களைப்புச் சிறிது நீங்கியது. சற்றுத் தொலைவில் சிலர் பணிவுடன் நிற்பதைக் கண்டனர். தம் மருகே, பழங்களும், கொஞ்சம் தள்ளித் தீமூட்டம் இருப்பதையும் கண்டனர். பரமகருணை மூர்த்தியாகிய பகவானே இத்தகைய நல்லவர்களின் இருப்பிடத்தே தங்களைக் கொண்டு வந்துவிட்டதாக எண்ணி மகிழ்ந்தனர்.

அருகிருந்த ஆற்றில் அனைவரும் நீராடினர். தூய்மையுள்ள நெஞ்சத்தால் அளிக்கப்பட்ட கனிவகைகளை ஆண்டவனுக்கு நிவேதனம் செய்து நன்றியுணர்வுடன் அக்கனிகளைப் பசியாற உண்டனர். தாயினும் சாலப்பரிந்து தக்க சமயத்தில் உபசரித்த அப்பெருமக்களின் உயர்ந்த உள்ளத்தைப் பாராட்டி அவர்களுக்கு நெஞ்சம் பொங்கும் நன்றியைக் கூறி விடைபெற்றுப் புறப்படலாயினர்.

சற்று நேரத்தில் பிராம்மணர்கள் வாழும் அக்கிரகாரம் ஒன்றை அடைந்தனர். அங்கிருந்த பிராமணர் இல்லம் ஒன்றைச் சார்ந்தனர். அவ்வீட்டில் அப்போது அவ்வில்லத் தலைவியான சேலாசலாம்பாள் என்பவர் மட்டுமே இருந்தார். கணவர் வெளியில் சென்றிருந்த நிலையிலும் தம், இல்லம் சார்பில் வைணவர்களை வரவேற்று உபசாரம் செய்தார். சற்று நேரத்துக்கெல்லாம் அவ்வில்லத்துக்குரிய ரங்கதாசரும் வந்து சேர்ந்தார். இருவரும் வருகை புரிந்த வைணவர்களுக்கு வயிறார விருந்தளித்து உபசாரம் செய்தனர்.

வயிறார உண்டு களைப்பாறிய இராமாநுசர் முதலானோர் இரண்டு நாள்கள் அவ்வீட்டிலேயே தங்கினர். ரங்கதாசருக்கு இராமாநுசர் மந்திர பூர்வமாகத் தீட்சையருளினார். பின்னர், வடமேற்குத் திசையை நோக்கி நடந்தார். வன்னி புஷ்கரணி என்னும் இடத்தை அடைந்து அங்கு இரண்டுநாள்கள் தங்கினார். தம்முடன் வந்த ரங்கதாசருக்கு விடை கொடுத்தனுப்பினார்.

பின்னர், சாளக்கிராமம் என்னும் நகரை அடைந்தார். அந்நகரில் வடுகநம்பி என்னும் பெயருடைய தவசீலரைச் சந்தித்தார். வடுகநம்பி என்பவர் பிராமணப்

பெரியார் இவர் ஆந்திர பூரணர் என்றும் அழைக்கப்பட்டார். மணமாகாத பிரம்மச்சாரி. ஒழுக்கசீலர். எனவே, ஆந்திர பூரணரைத் தம் அன்புக்குரிய சீடராக்கிக் கொண்டார்.

ஆந்திர பூரணர் யதிராசரைத் தம் குருவாக ஏற்று மனம் மொழி மெய்களால் தொண்டு புரிந்துவந்தார். தம்முடைய பெருஞ்செல்வமாகவே யதிராசரை ஆந்திரபூரணர் கருதி வந்தார். அவருடன் சில நாள்கள் அந்நகரில் தங்கியிருந்த யதிராசர் நரசிம்மக்ஷேத்திரத்தை நோக்கிப் புறப்பட்டார். அங்கே ஒரு பக்தரின் வீட்டில் தங்கி அவரால் வழிபடப்பெற்றுச் சிறப்புடன் இருந்து வந்தார்.

அந்நாட்டு மன்னர் விட்டலதேவர் என்பவர், அவர் பௌத்த சமயத்தைச் சார்ந்தவர். ஆயிரக்கணக்கான பௌத்தர்கட்கு அன்னதானம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவருக்கு மகள் ஒருத்தி இருந்தாள். அவளைப் பேய் பிடிருந்திருந்தது. புத்த துறவியார் பலர் முயன்றும் அப்பேயை ஓட்ட முடியவில்லை.

இராமானுசரின் வருகையை அறிந்த விட்டலதேவர் தம் அரசவைப் புலவர்களை அனுப்பி இராமானுசரை அழைத்து வரச் செய்தார். இராமானுசர் விட்டலதேவர் மாளிகையை வந்தடைந்தார். கண்டதுமே அரசகுமாரியைப் பிடித்திருந்த பேய் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவிட்டது. தன் மகள் பூரண நலம் அடைந்ததைக் கண்ட விட்டல தேவர் வியப்பும் மகிழ்வும் கொண்டார்.

இராமானுசரின் தெய்வீக ஆற்றலை உணர்ந்த விட்டலதேவர் அவர்மீது அளவுகடந்த பக்தி கொள்ளலானார். அவரின் திருவடி பணிந்து வைணவ தருமத்தை உபதேசிக்குமாறு வேண்டிக்கொண்டார். மேலும், தமது பௌத்த சமய ஆச்சார்யர்களை அழைத்து இராமானுசருடன் சமய சம்பந்தமான வாதம் செய்யுமாறு கேட்டுக் கொண்டார்.

சமயப்பேரவை கூட்டப்பெறறது. பௌத்த சமயப்புலவர்கள் கூடினர். இராமானுசரிடம் கேலியும் கிண்டலுமான கேள்விகளைக் கேட்டுப் பரிகசித்தனர். இதனைச் சகிக்காத விட்டலதேவர் அவர்களை அவையிலிருந்தும் வெளியேற்றினார். அடக்கமுடன் அமர்ந்திருந்த புலவர்களின் கேள்விகளுக்கு இராமானுசர் சாதுர்யமான விடைகளை அளித்தார்.

இராமானுசர் தம் வைணவ சித்தாந்தத்தை வகையுற எடுத்துக்கூறி முடித்தார். அப்போது பௌத்த சமயப்புலவர் ஒருவர் எழுந்தார். அவர் இராமானுசரின் கருத்துகளை மறுக்க வகை தெரியாமல், வைதீக சமயத்தையும் ஆத்திகர்களையும் பலவாறு நிந்திக்கத் தொடங்கினார். அதுகேட்டு விட்டலதேவர் மனம் வருந்திக்கூறலானார்.

'புலவரிற் சிறந்தவரே! நிந்தித்துக் கூறுதல் என்பது நீசர்களின் செயல். நீர்கூறும் வசைமொழியைக் கேட்க நான் இங்கு உட்கார்ந்திருக்கவில்லை. முடிந்தால் ஞான நூல்களின் சான்றுகளுடன் அவருடன் வாதம் செய்யும்! இல்லையேல், பௌத்த சமயம் பொய்ச்சமயம் என்று கூறி வைணவ சமயத்தைத் தழுவிக் கொள்ளும்!" என்று கடிந்து கூறினார்.

அரசர் வைணவ சமய சார்புடையவராக மாறிவிட்டார் என்பதனைப் பௌத்த சமய அறிஞர்கள் அறிந்து கொண்டனர். தங்கள் வாதம் இராமானுசர் முன்பு எடுபடாமல் போனதால் அகமும் முகமும் வாட்டமுற்று அடங்கிப்போயினர். தோல்வியுற்ற பௌத்த சமயப் புலவரைப் பார்த்து அரசர் கூறலானார்.

"புலவர்களே! இன்று வைணவ சமயாசாரியர்களால் நீங்கள் தோல்வியுற்று விட்டீர்கள். உங்களால் புத்த சமயக் கருத்துகளை வலிமையுடன் கூறி நிறுவனம் செய்யமுடியவில்லை. எனவே, உத்தமமான சமயம் எது என்பதை நன்றுகச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வாருங்கள்! அஞ்ஞானத்தைக் காட்டினும் ஞானமே சிறந்தது என்பதையும், துக்கத்தை விடச் சுகமே வரவேற்கத்தக்கது என்பதையும் அறிவாளிகள் ஒப்புக் கொள்வர். எனவே, நீங்கள் அனைவரும் வைணவ சமய ஆசாரியர் வாயிலாக வைணவ தீட்சை பெற்று நற்பேறு பெறுதலே செய்யத்தக்க செயலாகும்!" என்று தெளிந்த ஞானத்துடன் எடுத்துக்கூறினார்.

அரசரின் அறிவு செறிந்த நல்லுரையைக் கேட்டுப் பௌத்தருள் பலர் மனம் மாறினர். வைணவ சமயாசாரியராகிய இராமானுசரின் கொள்கைகள் ஏற்கத் தக்கவையே என்ற முடிவுக்கு வந்தனர்.

தம்மை ஆதரித்தும், தம் கொள்கைகளை ஏற்றுத் தம் குடிமக்கள் பலரையும் பௌத்த சமயத்திலிருந்து வைணவ சம

யத்திற்கு மாற்றியும் பெருமை செய்த விட்டல தேவருக்கு இராமாநுசர் "விஷ்ணு வர்த்தனர்" என்னும் விருது வழங்கிச் சிறப்புச் செய்தார்.

அன்றே பௌத்தர்கள் பலர் வைணவ சமயத்திற்கு மாறி வைணவராயினர். இவ்வாறு தாம் செல்லுமிடமெல்லாம் சமயக் கொள்கைகளை நிறுவித் தம் சமயத்தைப் பரப்பி வந்தார் இராமாநுசர்.

## திருநாராயணபுரப் பெருமாள்

சோழ மன்னனது கொடுமைக் கஞ்சித் திருவரங்கத்தினின்றும் புறப்பட்ட இராமாநுசர் ஏறக்குறையப் பன்னிரண்டு ஆண்டுகள் பல்வேறு தலங்களுக்குச் சென்று தங்கினார். விட்டல தேவரையும், இன்னும் பல பௌத்தர்களையும் வைணவராக்கினார். அங்கிருந்தும் தம் சீடர்களுடன் யாதவகிரிக்குப் பயணமானார். யாதவகிரி மேலைக்கோட்டை என்றும், திருநாராயணபுரம் என்றும் அழைக்கப்பெறும்.

திருநாராயணபுரத்தில் ஒரு நாள் விடியற்காலை இராமாநுசர் துளசி வனத்தை வலமாகச் சுற்றி வந்து கொண்டிருந்தார். அப்போது அங்கே மண்ணில் மறைந்து கிடந்த திருமாலின் திருவிக்கிரகம் ஒன்று தென்பட்டது. எழில் மிக்க அவ்விக்கிரகத்தை எடுத்து வந்து நீராட்டிப் பீடம் ஒன்றின் மீது வைத்தார். அதைக்கண்ட பக்தர்கள் பலரும் அளவிலா ஆனந்தம் கொண்டனர்.

அம்மூர்த்தத்தைக் கண்ட பெரியோர்கள் ஆண்டுகள் சிலவற்றுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சியினை நினைவு கூர்ந்தார்கள். அவர்கள் சிறுவர்களாக இருந்தபோது திருநாராயணபுரமலை மீது அம்மூர்த்தம் எழுந்தருளப் பெற்றிருந்தது. முகம்மதியர் ஆட்சிக்காலத்தில் இந்துக்கோயில்களையும், விக்கிரகங்களையும் சிதைக்கத் தொடங்கினர். அப்போது, கோவில் அர்ச்சகர்களே அம்மூர்த்தத்தை ஒளித்து வைத்து விட்டனர். அம்மூர்த்தமே இராமாநுசரால் கண்டெடுக்கப்பட்டது.

விக்கிரகத்தைக் கண்ட பக்தர்கள் விம்மிதமுற்றனர். இராமாநுசரின் வருகையால் கிடைத்த பெருந்தனம் என்று போற்றி இராமாநுசரையும் மூர்த்தியையும் வணங்கி வழிபட்டு நின்றனர்.

இராமாநுசரின் வேண்டுகோளின்படி அன்றே ஓர் ஆலயம் எழுப்பப்பட்டது. பந்தலால் சமைந்த அவ்வாலயத்தில் அம்மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்து மனமொழி மெய்களால் அனைவரும் அம்மூர்த்தியை வழிபட்டு வரலாயினர்.

நாளடைவில் யாதவாத்ரி பதி என்று வழங்கப்பட்ட அம்மூர்த்தத்துக்கு எழிலும் ஏற்றமும் மிக்க ஆலயம் ஒன்று எழுப்பட்டது. அவ்வாலயத்துக்கு அருகில் கல்யாணி என்னும் திருக்குளமும் தோண்டப்பெற்றது. அத்திருகுளத்துத் தீர்த்தமே பகவானின் திருமஞ்சனத்துக்கும் பக்தர்களுக்கும் பலவகையில் பயன்பட்டது.

ஒருநாள், இராமாநுசர் இவ்வாலயத்தின் வடபுறத்தே நடந்து சென்று கொண்டிருந்தார். அங்கே வெண்மையான மண்வகை மிகுந்திருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார். அவ்வெண்மையான மண்ணே வைணவர்கள் திருமண் தரித்துக் கொள்வதற்குப் பெரிதும் பயன்படுத்தப்பட்டது.

ஒருநாள் இரவு இராமாநுசரின் கனவில் யாதவாத்ரிபதி தோன்றிக் காட்சியளித்துத் திருவாய் மலர்ந்தருளினார்.

"இராமாநுச! மறைந்து கிடந்த என்னை வெளிப்படுத்தி ஆலயமும் கட்டுவித்தாய்! அருகில் புஷ்கரிணியும் ஏற்படுத்தினாய். திருமண் கிடைக்காமல் தவித்துக் கொண்டிருந்த வைணவர்களுக்குத் திருமண் இருக்கும் இடத்தையும் அறிந்து கைங்கர்யம் செய்தாய்! இவற்றால் நான் பெரிதும் மகிழ்ந்துள்ளேன். எனினும் மேலும் ஒரு தொண்டு உனக்காகக் காத்திருக்கிறது.

இவ்வாலயத்துக்கு உற்சவ மூர்த்தி இல்லை. எனவே, கோவில் வந்து தரிசிக்க இயலாதவர்கள் இருக்கும் இடம் தேடிச் சென்று தரிசனம் கொடுக்க முடியாமல் இருக்கிறேன். எனவே, டில்லி அரசனின் பாதுகாப்பில் இருக்கும் 'ராமப்பிரியர்' என்னும் திருநாமமுடைய உற்சவ மூர்த்தியை உடனே எடுத்துவருவாயாக! என்று யாதவாத்ரிபதி ஆணையிட்டருளினார்.

யாதவாத்ரிபதியின் அருளாணை கிடைக்கப்பெற்ற இராமாநுசர் மறுநாளே தம் சீடர்களுடன் டில்லிக்குப் புறப்படலானார். இரண்டு மாதங்களில் டில்லியை அடைந்து மன்னனைக் கண்டார்.

இராமாநுசரின் தெய்வீகப் பொலிவையும், ஞானப்பெருக்கையும் கண்டு மன்னன் மகிழ்ந்தார். வந்த காரணத்தை அறிந்தார். இராமாநுசரின் விருப்பப்படியே அம்மூர்த்தத்தைப் பெற்றுச் செல்ல இசைந்தார்.

இராமாநுசர் தேடிச் சென்ற விக்கிரகம் காணக்கிடைக்கவில்லை. மன்னனது தெய்வ சாலையில் பலநாடுகளிலிருந்தும் கொண்டு வந்து வைக்கப்பட்ட விக்கிரகங்கள் இருந்தன. அவற்றிடையே 'ராமப்பிரியர்' இல்லாதது கண்டு இராமாநுசர் வருந்தினார்.

மன்னனுக்கு மகள் ஒருத்தி இருந்தாள். அவள் மிகவும் பிரியமுடன் விக்கிரகம் ஒன்றை வைத்திருந்தாள். அதுவே தாம் தேடிவந்த மூர்த்தி என்பதையறிந்து மன்னனின் அனுமதியுடன் அதைப்பெற்று டில்லியிலிருந்தும் திரும்பலானார். வழியில் கொள்ளைக்கூட்டத்தார் சிலர் அந்த உற்சவ மூர்த்தியைக் கடத்திச் செல்லமுற்பட்டனர்.

அப்போது சேரிவாழ் மக்கள் இராமாநுசருக்குத் துணையாக நின்றனர். கொள்ளையர்களிடமிருந்து அவரையும் விக்கிரகத்தையும் காப்பாற்றினர். மேலைக்கோட்டை வரைக்கும் அவருக்கு உதவியாகவும் வந்தனர். உற்சவ மூர்த்தியையும், தம்மையும் காப்பாற்றிப் பெரிதும் உதவி புரிந்த சேரிவாழ் மக்களின் கருணை உள்ளத்தை எண்ணி உடையவர் உவந்தார். 'திருக்குலத்தார்' என்று நன்றியுணர்வுடன் அச்சேரி வாழ் மக்களை அன்பொழுக அழைத்தார்.

மேலும், அவர்களுக்குத் தம் நன்றி என்றும் நிலைத்திருக்கும் வகையில் ஆண்டுதோறும் மூன்று நாள்கள் திருக்கோயிலுக்குள் சென்று நாராயணபுரம் தரிசிக்கும் உரிமையையும் நிலைத்த ஏற்பாட்டின் மூலம் செய்தருளினார். திருநாராயணபுரத்திலேயே தங்கி வழிபட்டு வந்தார்.

உற்சவ மூர்த்தியை இராமாநுசர் எடுத்துச் சென்று விட்டார் என்ற செய்தியை அறிந்து டில்லி அரசகுமாரி சோர்ந்து போனாள். அம்மூர்த்தியின்பால் அளவற்ற காதல் கொண்டிருந்ததால், அரச குமாரியால் அம்மூர்த்தியைப் பிரிந்து வாழ முடியவில்லை. எனவே, அம்மூர்த்தியை அடைய வேண்டித் தெற்கு நோக்கி அவ்வரச குமாரி தன் பயணத்தைத் தொடங்கினாள்.

உண்ணாதும், உறங்காதும், வழிநடைத்துன்பம் பாராதும் அரசகுமாரி பித்துப் பிடித்தவளைப் போல இரவும் பகலும் நடந்து வந்தாள். இறுதியில் மேலைக்கோட்டையை அடைந்துவிட்டாள். அங்கெழுந்தருளியிருந்த உற்சவ மூர்த்தியைக் கண்டு உள்ளம் பூரித்தாள். பட்ட துன்பம் எல்லாம் பறந்து போயிற்று.

முகம்மதியப் பெண்ணாகிய அந்த அரசகுமாரி 'ராமபிரியர்' பால் கொண்டிருந்த அளவற்ற காதலைக் கண்டு உடையவரும் மற்றும் பலரும் பிரமித்து நின்றனர். கோவிலுள் சென்ற அந்த அரசகுமாரியை யாரும் தடுக்கவில்லை.

கருணை வடிவான அவ்வுற்சவ மூர்த்தியைக் கண்குளிரக் கண்ட அரசகுமாரி தன்னையே மறந்தாள். உண்மையான பக்திக்குச் சாதி மதம் உடல் என்பவை தடையாக இருக்கமுடியுமா? அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்த அரசகுமாரி அவ்வுற்சவ மூர்த்தியுடன் ஐக்கியமாகி விட்டாள்! ஆறு கடலுடன் சேர்ந்து விட்டது.

அரசகுமாரியைக் காதலித்து வந்த முகம்மதிய அரசகுமாரனும் அரச குமாரியைப் பின் தொடந்து வந்தான். அரசகுமாரியின் அபரிமிதமான பக்தியைக் கண்டு அவனும் திருமாலை வழிபடும் வைணவனாகி விட்டான்.

உடல்மீது கொண்டிருக்கும் அபிமானத்தை விட்டுவிடும் போது தான் பகவானின் பரம காருண்யம் சித்திக்கிறது. நாமம், ரூபம், இடம் என்கின்ற புத்தியாலேயே பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன், முகம்மதியன், கிறித்தவன் முதலான பல்வேறு பிரிவுகள் காணப்படுகின்றன.

சாதியபிமானம் ஒழிந்தவர்கள் தாம் பகவானது கருணைக்குப் பாத்திரமாக முடியும். அவர்களே பரம பாகவதர்கள் என மதிக்கப்படுவர்.

இக்காரணங்களாலேயே இராமாநுசரும் அரசகுமாரியையும் மரியாதை செய்துவந்தார். அரசகுமாரிக்கும் புனிதச் சிலை ஒன்று நிறுவப்பட்டு வழிபடும் பெருமை வழக்கில் இருந்து வருகிறது. இவ்வாறு எம்பெருமானார் ஏறக்குறையப் பன்னிரண்டாண்டுகள் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்தார்.

(தொடரும்)

Published on behalf of T.T.Devasthanams by N.S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by M. Lakshman Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றாகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றொரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத்தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப் பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றுண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள, முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

**சிற்ப அளவு முறைகள் :** ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எநத அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**சிற்பங்கள் :** விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையின ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

**ஆழ்வார்கள் :** தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

**வைதீகச் சடங்குகள் :** அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

**கலைகள் :** இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப் பட்டுள்ளது. நவீன காலம் வரை சேகரிககப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளரகளின் உருவமைதிகள் இங்கு இடம்பெற்றுள்ளன. குண்டரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறககூறும.

அனுமதி நேரம்: காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

அனுமதிக் கட்டணம்: பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்

